தம் - அப்படிப்பட்டவனாய்
மஹாபாகம் - த்ரிலோக ப்ரசித்தி பெற்றவனும்,
உத்யதம் - தேர்ச்சியடைந்த
கால காலம் இவ - ப்ரளயகால யமனுக்கொப்பாய்
ஶத்ரு ஹந்தாரம் - சத்ருக்களை சம்ஹரிப்பவனும்,
மந்த்ரிபி: - மந்திரிமார்களால்
பரிவாரிதம் - சூழப்பட்டவனாய்
திவ்ய வஸ்த்ராபரணம் - திவ்யமான வஸ்திரங்களையும் ஆபரணங்களையுமணிந்தவனாய்
திவ்ய மால்யோப ஶோபிதம் - திவ்யமான மாலைகளால் அழகுவாய்ந்து விளங்குபவனாய்
ஆஸநே - ஆஸனத்தில்
ஸூபவிஷ்டம் - நன்கு வீற்றிருக்கும்
ராக்ஷஸேந்த்ரம் - ராக்ஷஸாதீசனான
தம் - அந்த
ராவணம் - ராவணனை
அபிகம்ய - கிட்டி,
வாக்யம் - பின்வரும் மொழியை
பயவிஹ்வலா - பயத்தால் கலவரமடைந்த மனத்தினளாய்
அப்ரவீத் - மொழிந்தாள்.

**तमब्रवीद्दीप्तविशाललोचनं प्रदर्शयित्वा भयमोहमूर्च्छिता ।**
**सुदारुणं वाक्यमभीतचारिणी महात्मना शूर्पणखा विरूपिता ॥**

**தமப்ரவீத் தீப்த விஶால லோசனம்**
**ப்ரதர்ஶயித்வா பயமோஹமூர்ச்சிதா ।**
**ஸூதாருணம் வாக்யமபீத சாரிணீ**
**மஹாத்மநா ஶூர்பணகா விரூபிதா ॥** 25

அபீத சாரிணீ - பயமின்றி நினைத்தவிடங்களில் செல்பவளும்,
மஹாத்மநா - மஹாத்மாவாகிய லக்ஷ்மணரால்
விரூபிதா - அங்கபங்கம் பண்ணப்பட்டவளுமான
ஶூர்பணகா - சூர்பணகை
பயமோஹ மூர்ச்சிதா - பயத்தால் மெய்பதறி உள்ளம் நடுங்கியவளாய்
தீப்த விஶால லோசனம் - கோபஒளி வீசிக்கொண்டு அகன்ற கண்களையுடைய
தம் - அவனிடம்
ஸூதாருணம் - அஸஹ்யமாய் தான் பட்ட பாட்டை
ப்ரதர்ஶயித்வா - சுட்டிக்காட்டி,
வாக்யம் - பின்வரும் சொல்லை
அப்ரவீத் - மொழிந்தாள்.

*இத்யார்ஷே ஶ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே ஶூர்பணகோத்யமே நாம த்வாத்ரிம்ஶ: ஸர்க: ॥*



## த்ரயத்ரிம்ஶ: ஸர்க: - 33

**ततः शूर्पणखा दीना रावणं लोकरावणम् ।**
**अमात्यमध्ये संक्रुद्धा परुषं वाक्यमब्रवीत् ॥**

**தத: ஶூர்பணகா தீநா ராவணம் லோகராவணம் ।**
**அமாத்யமத்யே ஸங்க்ருத்தா பருஷம் வாக்யமப்ரவீத் ॥** 1

தீநா - வெகு பரிதாபமான நிலையிலிருந்த
ஶூர்பணகா - சூர்பணகை,
லோகராவணம் - உலகங்களைக் கதர அடிக்கும்
ராவணம் - ராவணனைப் பார்த்து
அமாத்ய மத்யே - மந்திரிமார்கள் முன்னிலையில்
தத: - அப்பொழுது
ஸங்க்ருத்தா - மிக சினம்கொண்டவளாய்
பருஷம் - கொடுமையான
வாக்யம் - சொல்லை
அப்ரவீத் - பின்வருமாறு மொழிந்தாள்.

**प्रमत्तः कामभोगेषु स्वैरवृत्तो निरङ्कुशः ।**
**समुत्पन्नं भयं घोरं बोद्धव्यं नावबुध्यसे ॥**

**ப்ரமத்த: காமபோகேஷு ஸ்வைரவ்ருத்தோ நிரங்குஶ: ।**
**ஸமுத்பந்நம் பயம் கோரம் போத்தவ்யம் நாவபுத்யஸே ॥** 2

காமபோகேஷு - 'சிற்றின்பங்களில்
ப்ரமத்த: - மூழ்கி கிடக்கின்றவனாய்
ஸ்வைரவ்ருத்த: - மனதில் தோன்றியபடியே நடப்பவனும்
நிரங்குஶ: - அடக்கியாளுபவனை கண்டிராதவனுமான நீ
போத்தவ்யம் - அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியதும்,
ஸமுத்பந்நம் - கிட்டியிருக்கிறதும்,
கோரம் - அஸஹ்யமாயிருக்கிறதுமான
பயம் - விபத்தை
ந அவபுத்யஸே - தெரிந்துகொள்ளாதிருக்கின்றனை.

**सक्तं ग्राम्येषु भोगेषु कामवृत्तं महीपतिम् ।**
**लुब्धं न बहु मन्यन्ते श्मशानाग्निमिव प्रजाः ॥**

**ஸக்தம் க்ராம்யேஷு போகேஷு காமவ்ருத்தம் மஹீபதிம் ।**
**லுப்தம் ந பஹு மன்யந்தே ஶ்மஶாநாக்நிமிவ ப்ரஜா: ॥** 3

காம வ்ருத்தம் - 'காமத்தில் மூழ்கியவனாய்
க்ராம்யேஷு - அற்ப
போகேஷு - போகங்களில்

ஸக்தம் - காலங்கழிப்பவனாய்
லுப்தம் - காமாதுரனாகிய
மஹீபதிம் - ராஜாவை
ப்ரஜா: - ப்ரஜைகள்
ஶ்மஶாநாக்நிம் - சுடுகாட்டுத்தீயை
இவ - எவ்வண்ணமோ அவ்வண்ணமே
ந பஹு மன்யந்தே - மதியார்கள்.

स्वयं कार्याणि यः काले नानुतिष्ठति पार्थिवः ।
स तु वै सह राज्येन तैश्च कार्यैर्विनश्यति ॥

ஸ்வயம் கார்யாணி ய: காலே நாநுதிஷ்டதி பார்திவ: ।
ஸ து வை ஸஹ ராஜ்யேன தைஶ்ச கார்யைர்விநஶ்யதி ॥ 4

ய: - எந்த
பார்திவ: - மன்னன்,
கார்யாணி - செய்யவேண்டிய கார்யங்களை
காலே - செய்யவேண்டிய காலத்தில்
ஸ்வயம் - தானே
அநுதிஷ்டதி ந - செய்யாதிருக்கிறானோ,
ஸ: - அவன்
தை: - அந்த
கார்யை: ச - கார்யங்களாலேயே
து - இது காரணமாய்
ராஜ்யேன - ராஜ்யத்தோடு
ஸஹ வை - கூடவே
விநஶ்யதி - அழிகிறான்.

अयुक्तचारं दुर्दर्शम् अस्वाधीनं नराधिपम् ।
वर्जयन्ति नरा दूरान्नदीपङ्कमिव द्विपाः ॥

அயுக்தசாரம் துர்தர்ஶமஸ்வாதீநம் நராதிபம் ।
வர்ஜயந்தி நரா தூராந்நதீபங்கமிவ த்விபா: ॥ 5

நரா: - 'ஜனங்கள்
அயுக்தசாரம் - சத்ருக்களின் நடவடிக்கைகளை தெரிந்துவரும் ஒற்றர்களை அனுப்பாதவனும்,
துர்தர்ஶம் - ப்ரஜைகள் நேரில்காணதரிசனம் கொடுக்காதவனும்,
அஸ்வாதீநம் - சுயபுத்தியில்லாதவனுமான
நராதிபம் - அரசனை
த்விபா: - யானைகள்
நதீபங்கம் - நதிகளின் சேற்றை
இவ - எவ்வண்ணமோ அவ்வண்ணமே



தூராத் - தூரத்திலிருந்தே
வர்ஜயந்தி - துறக்கின்றார்கள்.

ये न रक्षन्ति विषयमस्वाधीना नराधिपाः ।
ते न वृद्ध्या प्रकाशन्ते गिरयः सागरे यथा ॥

யே ந ரக்ஷந்தி விஷயமஸ்வாதீநா நராதிபா: ।
தேந வ்ருத்த்யா ப்ரகாஶந்தே கிரய: ஸாகரே யதா ॥ 6

யே - 'எந்த
நராதிபா: - அரசர்கள்,
விஷயம் - ராஜ்யத்தை
அஸ்வாதீநா: - சுயபுத்தியில்லாதவர்களாய்
ரக்ஷந்தி ந - ஆளுகிறார்களில்லையோ
தே - அவர்கள்
ஸாகரே - ஸமுத்திரத்தில்
கிரய: - பர்வதங்கள்
யதா - போலவே
வ்ருத்த்யா - ராஜ்ய அதிகார பெருக்குக்கொண்டு
ப்ரகாஶந்தே ந - விடீங்கார்கள்.

आत्मवद्भिर्विगृह्य त्वं देवगन्धर्वदानवैः ।
अयुक्तचारश्चपलः कथं राजा भविष्यसि ॥

ஆத்மவத்பிர் விக்ருஹ்ய த்வம் தேவகந்தர்வ தானவை: ।
அயுக்த சாரஶ்சபல: கதம் ராஜா பவிஷ்யஸி ॥ 7

ஆத்மவத்பி: - 'அதி சாதுர்யசாலிகளாகிய
தேவ கந்தர்வ தானவை: - தேவர்கள், கந்தர்வர்கள், தானவர்கள் இவர்களோடு
விக்ருஹ்ய - த்வேஷம் சம்பாதித்துக்கொண்டு,
அயுக்த சார: - அவர்கள் சூழ்ச்சிகளைத் தெரிந்துவரும் ஒற்றர்களை அனுப்பாதவனும்,
சபல: - ஒரு கார்யத்தில் முன்பின் யோசியாது துடுக்காய்ப் புகுபவனுமான
த்வம் கதம் - நீ எப்படி
ராஜா - அரசனாய்
பவிஷ்யஸி - விளங்கப்போகிறாய்?

त्वं तु बालस्वभावश्च बुद्धिहीनश्च राक्षस ।
ज्ञातव्यं तु न जानीषे कथं राजा भविष्यसि ॥

த்வம் து பால ஸ்வபாவஶ்ச புத்திஹீனஶ்ச ராக்ஷஸ ।
க்ஞாதவ்யம் து ந ஜாநீஷே கதம் ராஜா பவிஷ்யஸி ॥ 8

பால ஸ்வபாவ: ச - 'சிறுபிள்ளைத் தன்மையுள்ளவனும்,
புத்திஹீன: ச - புத்தியற்றவனுமான

த்வம் - நீ,
க்ஞாதவ்யம் து - அவச்யம் தெரிந்துகொள்ள வேண்டியதையும்
ஜாநீஷே ந - தெரிந்துகொள்ளாதிருக்கின்றனை.
ராக்ஷஸ - ஓ ராக்ஷஸ!
து - இப்படி இருப்பதால்
கதம் - எப்படி
ராஜா - அரசனாய்
பவிஷ்யஸி - விளங்கப்போகிறாய்?

येषां चारश्च कोशश्च नयश्च जयतां वर ।
अस्वाधीना नरेन्द्राणां प्राकृतैस्ते जनैः समाः ॥

யேஷாம் சாரஶ்ச கோஶஶ்ச நயஶ்ச ஜயதாம் வர ।
அஸ்வாதீநா நரேந்த்ராணாம் ப்ராக்ருதைஸ்தே ஜனை: ஸமா: ॥ 9

ஜயதாம் வர - 'பிறர்கொட்டத்தை அடக்குபவர்களில் உத்தமனே!
யேஷாம் - எந்த
நரேந்த்ராணாம் - அரசர்களுக்கு
சார: ச - ஒற்றனும்,
கோஶ: ச - பொக்கிஷமும்,
நய: ச - எந்தக் காரியத்திலும் முன் ஜாக்கிரதையுடன் இருத்தலும்,
அஸ்வாதீநா: - தன்வசம் இல்லாமலிருக்கின்றனவோ,
தே - அவர்கள்
ப்ராக்ருதை: ஜனை: - பாமர ஜனங்களோடு
ஸமா: - சேர்க்க வேண்டியவர்கள்.

यस्मात् पश्यन्ति दूरस्थान् सर्वानर्थान्नराधिपाः ।
चारेण तस्मादुच्यन्ते राजानो दीर्घचक्षुषः ॥

யஸ்மாத் பஶ்யந்தி தூரஸ்தான் ஸர்வாநர்தாந்நராதிபா: ।
சாரேண தஸ்மாதுச்யந்தே ராஜாநோ தீர்கசக்ஷுஷ: ॥ 10

நராதிபா: - 'மன்னர்கள்
தூரஸ்தான் - தூரங்களில் நடைபெறும்
அர்தாந் - விஷயங்கள்
ஸர்வாந் - எல்லாவற்றையும்
சாரேண - சாரவர்க்கத்தைக் கொண்டு
பஶ்யந்தி - அறிகின்றார்கள்.
யஸ்மாத் தஸ்மாத் - இதனால்தான்
ராஜாந: - அரசர்கள்
தீர்க சக்ஷுஷ: - தீர்க்கதரிசிகளென்று
உச்யந்தே - சொல்லப்படுகிறார்கள்.



अयुक्तचारं मन्ये त्वां प्राकृतैः सचिवैर्वृतम् ।
स्वजनं तु जनस्थानं हतं यो नावबुध्यसे ॥

அயுக்தசாரம் மன்யே த்வாம் ப்ராக்ருதை: ஸசிவைர் வ்ருதம் ।
ஸ்வஜனம் து ஜனஸ்தானே ஹதம் யோ நாவபுத்யஸே ॥ 11

ய: - எந்த நீ
ஸ்வஜனம் - உனது சுற்றத்தாரையும்
ஜனஸ்தானம் து - ஜனஸ்தானத்தையும்
ஹதம் - நாசமடைந்ததாக
அவபுத்யஸே ந - அறிந்துகொள்ளாதிருக்கின்றனையோ; (அந்த)
ப்ராக்ருதை: - நிஷ்ப்ரயோஜனமான
ஸசிவை: - மந்திரிமார்களால்
வ்ருதம் - சூழப்பட்டிருக்கும்
த்வாம் - உன்னை
அயுக்த சாரம் - சாரவர்க்கத்தை உபயோகியாதவனென
மன்யே - நினைக்கிறேன்.

चतुर्दश सहस्राणि रक्षसां क्रूरकर्मणाम् ।
हतान्येकेन रामेण खरश्च सहदूषणः ॥

சதுர்தஶஸஹஸ்ராணி ரக்ஷஸாம் க்ரூரகர்மணாம் ।
ஹதான்யேகேந ராமேண கரஶ்ச ஸஹதூஷண: ॥ 12

ஸஹதூஷண: - தூஷணனோடுகூட
கர: ச - கரனும்
க்ரூர கர்மணாம் - கொடிய செயல் புரியும்
ரக்ஷஸாம் - அரக்கர்களுடைய
சதுர்தஶ - பதினான்கு
ஸஹஸ்ராணி - ஆயிரவர்களும்
ராமேண - ராமன்
ஏகேந - ஒருவனால்
ஹதானி - கொல்லப்பட்டார்கள்.

ऋषीणामभयं दत्तं कृतक्षेमाश्च दण्डकाः ।
धर्षितं च जनस्थानं रामेणाक्लिष्टकर्मणा ॥

ருஷீணாமபயம் தத்தம் க்ருத க்ஷேமாஶ்ச தண்டகா: ।
தர்ஷிதம் ச ஜனஸ்தாநம் ராமேணாக்லிஷ்ட கர்மணா ॥ 13

அக்லிஷ்ட கர்மணா - அனாயாசமாய் எதையும் செய்யவல்ல
ராமேண - ராமன் என்பவனால்
ருஷீணாம் - ரிஷிகளுக்கு
அபயம் - அபயம் 'அஞ்சாற்க' என்பது

தத்தம் - கொடுக்கப்பட்டது.
தண்டகா: ச - தண்டகாவனங்களும்
க்ருத க்ஷேமா: - இன்புற்று விளங்கும்படி செய்யப்பட்டன.
ஜனஸ்தாநம் - ஜனஸ்தானமும்
தர்ஷிதம் - பாழக்கப்பட்டது.

त्वं तु लुब्धः प्रमत्तश्च पराधीनश्च रावण ।
विषये स्वे समुत्पन्नं भयं यो नावबुध्यसे ॥

த்வம் து லுப்த: ப்ரமத்தஶ்ச பராதீனஶ்ச ராவண ।
விஷயே ஸ்வே ஸமுத்பந்நம் பயம் யோ நாவபுத்யஸே ॥ 14

ராவண - 'ராவணா!
ய: - எந்த
த்வம் து - நீயோ,
ப்ரமத்த: - ஜாக்ரதையில்லாதவனாய்,
பராதீன: - சுயபுத்தியில்லாதவனாய்,
லுப்த: ச - காமாதுரனாய்
ஸ்வ - உனது
விஷயே ச - தேசங்களிலேயே
ஸமுத்பந்நம் - உண்டாயிருக்கிற
பயம் - விபத்தை
அவபுத்யஸே ந - தெரிந்துகொள்ளாதிருக்கின்றனை.

तीक्ष्णमल्पप्रदातारं प्रमत्तं गर्वितं शठम् ।
व्यसने सर्वभूतानि नाभिधावन्ति पार्थिवम् ॥

தீக்ஷ்ண மல்ப ப்ரதாதாரம் ப்ரமத்தம் கர்விதம் ஶடம் ।
வ்யஸநே ஸர்வபூதாநி நாபிதாவந்தி பார்திவம் ॥ 15

தீக்ஷ்ணம் - 'சிடுமூஞ்சியுடையவனும்,
அல்ப ப்ரதாதாரம் - தாராளமாய் கொடாதவனும்,
கர்விதம் - தலைகொழுத்தவனும்,
ப்ரமத்தம் - ஜாக்கிரதையில்லாதவனும்,
ஶடம் - சர்வசோம்பேறியுமான
பார்திவம் - ஓர் மன்னனை
வ்யஸநே - சங்கடகாலத்தில்
ஸர்வபூதாநி - பிரஜைகளில் யாரும்
அபிதாவந்தி ந - அணுக மாட்டார்கள்.

अतिमानिनमग्राह्यमात्मसंभावितं नरम् ।
क्रोधनं व्यसने हन्ति स्वजनोऽपि महीपतिम् ॥



அதிமாநிந மக்ராஹ்ய மாத்மஸம்பாவிதம் நரம் ।
க்ரோதநம் வ்யஸநே ஹந்தி ஸ்வஜநோऽபி மஹீபதிம் ॥ 16

அதிமாநிநம் - 'தனக்கு தெரியாததொன்றுமில்லையெனும் எண்ணமுடையவனும்
அக்ராஹ்யம் - யாவராலுமணுக முடியாதவனும்,
ஆத்ம ஸம்பாவிதம் - தன்னையே பெருமைபடுத்தி கொள்பவனும்,
க்ரோதநம் - காரணமின்றி கோபிப்பவனும்,
மஹீபதிம் - அரசனுமான
நரம் - ஓர் புருஷனை
வ்யஸநே - கஷ்டகாலத்தில்
ஸ்வஜந: அபி - தன் ஜனமே
ஹந்தி - அழிக்கிறது.

नानुतिष्ठति कार्याणि भयेषु न बिभेति च ।
क्षिप्रं राज्याच्च्युतो दीनस्तृणैस्तुल्यो भविष्यति ॥

நாநுதிஷ்டதி கார்யாணி பயேஷு ந பிபேதி ச ।
க்ஷிப்ரம் ராஜ்யாச்ச்யுதோ தீனஸ்த்ருணைஸ்துல்யோ பவிஷ்யதி ॥ 17

கார்யாணி - 'செய்யவேண்டிய கார்யங்களை
அநுதிஷ்டதி ந - ஒருவன் செய்யாது நழுவவிடுகிறான்.
பயேஷு - விபத்துஹேதுக்களில்,
பிபேதி ந - அவன் அக்கரைப்படாதிருக்கிறான்.
ச - அதனால்
க்ஷிப்ரம் - சீக்கிரமே
ராஜ்யாத் - அவன் ராஜ்யத்திலிருந்து
ச்யுத: - நழுவியவனாய்
தீன: - வறுமையடைந்தவனாய்
த்ருணை: - துரும்புகளோடு
துல்ய: - சமானனாய்
பவிஷ்யதி - ஆய்விடுவான்.

शुष्कैः काष्ठैर्भवेत् कार्यं लोष्टैरपि च पांसुभिः ।
न तु स्थानात् परिभ्रष्टैः कार्यं स्याद्वसुधाधिपैः ॥

ஶுஷ்கை:காஷ்டைர் பவேத் கார்யம் லோஷ்டைரபி ச பாம்ஸுபி: ।
ந து ஸ்தாநாத் பரிப்ரஷ்டை: கார்யம் ஸ்யாத் வஸுதாதிபை: ॥ 18

ஶுஷ்கை: காஷ்டை: - காய்ந்த கட்டைகளாலும்,
லோஷ்டை: ச - இருப்புத்துருக்களாலும்,
பாம்ஸுபி: அபி - தூசிகளாலும்,
கார்யம் - ஒரு பிரயோஜனம்
பவேத் - ஏற்படலாம்.

| | |
|---|---|
| து | - ஆனாலோ |
| ஸ்தாநாத் | - உன்னத பதவியிலிருந்து |
| பரிப்ரஷ்டை: | - நழுவிய |
| வஸுதாதிபை: | - மன்னர்களால் |
| கார்யம் | - பிரயோஜனமான காரியமென்பதே |
| ஸ்யாத் ந | - உண்டாகமாட்டாது. |

उपभुक्तं यथा वासः स्रजो वा मृदिता यथा ।
एवं राज्यात् परिभ्रष्टः समर्थोऽपि निरर्थकः ॥

உபபுக்தம் யதா வாஸ: ஸ்ரஜோ வா ம்ருதிதா யதா।
ஏவம் ராஜ்யாத் பரிப்ரஷ்ட: ஸமர்தோऽபி நிரர்தக: ॥ 19

| | |
|---|---|
| உபபுக்தம் | - கட்டிக்கழித்த |
| வாஸ: | - வஸ்திரம், |
| யதா | - எப்படியோ; |
| வா | - அல்லது, |
| ம்ருதிதா: | - கழற்றிக் கசக்கப்பட்ட |
| ஸ்ரஜ: | - பூமாலைகள், |
| யதா | - எப்படியோ; |
| ஏவம் | - இப்படியேதான், |
| ராஜ்யாத் | - அரச பதவியிலிருந்து |
| பரிப்ரஷ்ட: | - நழுவிய ஒருவன், |
| ஸமர்த: அபி | - திறமையுற்றவனாயினும் |
| நிரர்தக: | - நிஷ்ப்ரயோஜனமானவனே. |

अप्रमत्तश्च यो राजा सर्वज्ञो विजितेन्द्रियः ।
कृतज्ञो धर्मशीलश्च स राजा तिष्ठते चिरम् ॥

அப்ரமத்தஶ்ச யோ ராஜா ஸர்வஜ்ஞோ விஜிதேந்த்ரிய:।
க்ருதஜ்ஞோ தர்மஶீலஶ்ச ஸ ராஜா திஷ்டதே சிரம் ॥ 20

| | |
|---|---|
| ய: | - எந்த ஒரு |
| ராஜா | - அரசன் |
| அப்ரமத்த: | - ஏமாறாதவனாய், |
| விஜிதேந்த்ரிய: | - இந்திரியங்களை அடக்கினவனாய், |
| ஸர்வஜ்ஞ: | - அறியவேண்டியவையெல்லாமறிந்தவனாய், |
| தர்மஶீல: | - ராஜ்யநீதியில் பற்றுடையவனாய், |
| க்ருதஜ்ஞ: ச | - அதற்கேற்றபடி நடப்பவனுமோ, |
| ஸ: ச | - அவன் ஒருவன்தான், |
| ராஜா | - மன்னனாக |
| சிரம் | - வெகுகாலம் |
| திஷ்டதே | - வாழ்கிறான். (ஆர்ஷம்) |



नयनाभ्यां प्रसुप्तोऽपि जागर्ति नयचक्षुषा ।
व्यक्तक्रोधप्रसादश्च स राजा पूज्यते जनैः ॥

நயநாப்யாம் ப்ரஸுப்தோऽபி ஜாகர்தி நய சக்ஷுஷா।
வ்யக்த க்ரோத ப்ரஸாதஶ்ச ஸ ராஜா பூஜ்யதே ஜனை: ॥ 21

| | |
|---|---|
| ஸ: | - அந்த |
| ராஜா | - அரசன் |
| நயநாப்யாம் | - இரு கண்களைக் கொண்டு |
| ப்ரஸுப்த: அபி | - தூங்கினவனாக இருக்கையிலும், |
| நய சக்ஷுஷா | - நீதி என்னும் கண்ணைக்கொண்டு |
| ஜாகர்தி | - விழித்துக்கொண்டிருக்கான். |
| ச | - அதனால் |
| வ்யக்த க்ரோத ப்ரஸாத: | - ஸார்த்தமான கோபமும் அனுக்கிரகமும் உடையவனாய் |
| ஜனை: | - ஜனங்களால் |
| பூஜ்யதே | - கொண்டாடப்படுகிறான். |

त्वं तु रावण दुर्बुद्धिर्गुणैरेतैर्विवर्जितः ।
यस्य तेऽविदितश्चारै रक्षसां सुमहान् वधः ॥

த்வம் து ராவண துர்புத்திர் குணை ரேதைர் விவர்ஜித:।
யஸ்ய தே (அ)விதிதஶ்சாரை ரக்ஷஸாம் ஸுமஹான் வத: ॥ 22

| | |
|---|---|
| ராவண | - ராவணா! |
| த்வம் | - நீ |
| துர்புத்தி: | - எதெதை எப்பொழுது செய்யவேண்டும் எனும் மதியில்லாதவன். |
| ஏதை: | - மேற்கண்ட |
| குணை: | - குணங்களால் |
| விவர்ஜித: | - அணுகப்பெறாதவன். |
| து | - ஆதலால் |
| யஸ்ய தே | - அந்த உனக்கு |
| ரக்ஷஸாம் | - அரக்கர்களின் |
| ஸுமஹான் | - கொடிய |
| வத: | - வதமானது |
| சாரை: | - சாரர்களைக்கொண்டு |
| அவிதித: | - தெரியவில்லை. |

परावमन्ता विषयेषु संगतो न देशकालप्रविभागतत्त्ववित् ।
अयुक्तबुद्धिर्गुणदोषनिश्चये विपन्नराज्यो नचिराद्विपत्स्यसे ॥

பராவமந்தா விஷயேஷு ஸங்கதோ
ந தேஶகால ப்ரவிபாக தத்வவித்।
அயுக்த புத்திர் குண தோஷ நிஶ்சயே
விபந்நராஜ்யோ ந சிராத் விபத்ஸ்யஸே ॥ 23

ந சிராத் - சீக்கிரமே
பராவமந்தா - சத்துருக்களை அலக்ஷியம் செய்பவனும்,
விஷயேஷு - அற்ப சுகங்களில்
ஸங்கவான் - மூழ்கியவனும்,
ந தேஶகால ப்ரவிபாக-தேசம் காலம் இவைகளின் வித்தியாசத்தை
தத்வ வித் உள்ளபடி அறியாதவனும்,
குணதோஷ நிஶ்சயே-நன்மைகள் தீமைகள் இவைகளை பகுத்து அறியும் விஷயத்தில்
அயுக்த புத்தி: - புத்தியை செலுத்தாதவனும்
விபந்ந ராஜ்ய: - க்ஷீணித்த ராஜ்யமுடையவனுமான நீ
விபத்ஸ்யஸே - துன்பமடையப் போகின்றனை.

इति स्वदोषान् परिकीर्तितांस्तया समीक्ष्य बुद्ध्या क्षणदाचरेश्वरः ।
धनेन दर्पेण बलेन चान्वितो विचिन्तयामास चिरं स रावणः ॥

இதி ஸ்வதோஷான் பரிகீர்திதான் தயா
ஸமீக்ஷ்ய புத்த்யா க்ஷணதாசரேஶ்வர:।
தனேன தர்பேண பலேந சாந்விதோ
விசிந்தயாமாஸ சிரம் ஸ ராவண: ॥ 24

தனேன - செல்வத்தாலும்,
தர்பேண - செறுக்காலும்,
பலேந ச - ஆற்றலாலும்
அந்வித: - விளங்குபவனும்,
க்ஷணதாசரேஶ்வர: - ராக்ஷஸ மன்னனுமாகிய
ஸ: ராவண: - அந்த ராவணன்
தயா - அவளால்
இதி - மேற்கண்டவாறு
பரிகீர்திதான் - எடுத்துரைக்கப்பட்ட
ஸ்வதோஷான் - தன்து குறைகளை
புத்த்யா - பகுத்தறிவுகொண்டு
ஸமீக்ஷ்ய - சீர்தூக்கி,
சிரம் - கொஞ்சநேரம்
விசிந்தயாமாஸ - தீர்க்காலோசனை செய்தான்.

*இத்யார்ஷே ஶ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே*
*ராவண நிந்தா நாம த்ரயஸ்த்ரிம்ஶ: ஸர்க: ॥*



சதுஸ்த்ரிம்ஶ: ஸர்க: - 34

ततः शूर्पणखां क्रुद्धां ब्रुवन्तीं परुषं वचः ।
अमात्यमध्ये संक्रुद्धः परिपप्रच्छ रावणः ॥

தத: ஶூர்பணகாம் க்ருத்தாம் ப்ருவந்தீம் பருஷம் வச:।
அமாத்ய மத்யே ஸங்க்ருத்த: பரிபப்ரச்ச ராவண: ॥ 1

தத: - அப்பொழுது
அமாத்ய மத்யே - மந்திரிமார்கள் முன்னிலையில்
பருஷம் - கொடும்
வச: - சொல்லை
க்ருத்தாம் - சினங்கொண்டு
ப்ருவந்தீம் - சொல்லுகிற
ஶூர்பணகாம் - சூர்பணகையை பார்த்து
ராவண: - ராவணன்,
ஸங்க்ருத்த: - மிக்க கோபம்கொண்டு
பரிபப்ரச்ச - பின்வருமாறு வினாவினாள்.

कश्च रामः कथंवीर्यः किंरूपः किंपराक्रमः ।
किमर्थं दण्डकारण्यं प्रविष्टः स दुरासदम् ॥

கஶ்ச ராம: கதம் வீர்ய: கிம்ரூப: கிம் பராக்ரம:।
கிமர்தம் தண்டகாரண்யம் ப்ரவிஷ்ட: ஸ துராஸதம் ॥ 2

ராம: - ராமனென்பவன்,
க: ச - யார்?
கதம் வீர்ய: - என்ன பெருமை வாய்ந்தவன்?
கிம்ரூப: - உருவம் எப்படிப்பட்டது?
கிம் பராக்ரம: - பராக்கிரமம் எத்தன்மையது?
ஸ: - அவன்
துராஸதம் - எவராலும் புகற்கரிய
தண்டகாரண்யம் - தண்டகாரண்யத்திற்கு
கிமர்தம் - என்ன காரியமாய்
ப்ரவிஷ்ட: - வந்திருக்கிறான்.

आयुधं किं च रामस्य निहता येन राक्षसाः ।
खरश्च निहतः संख्ये दूषणस्त्रिशिरास्तथा ॥

ஆயுதம் கிம் ச ராமஸ்ய நிஹதா யேன ராக்ஷஸா:।
கரஶ்ச நிஹத: ஸங்க்யே தூஷணஸ்த்ரிஶிராஸ் ததா ॥ 3

யேன - எவனால்
ராக்ஷஸா: - அரக்கர்கள்,

ஸங்க்யே - போரில்
நிஹதா: - கொல்லப்பட்டார்களோ,
கரஶ்ச - கரனும்,
நிஹத: - கொல்லப்பட்டானோ?
தூஷண: - தூஷணனும்,
த்ரிஶிரா: - த்ரிசிரஸ்ஸும்,
ததா - அப்படியே கொல்லப்பட்டார்களோ, (அந்த)
ராமஸ்ய - ராமனுக்கு,
ஆயுதம் ச - வாள் முதலிய பிரஹரண ஆயுதவர்க்கம், சக்கிரம் முதலிய ஹஸ்தமுக்தமெனும் ஆயுதவர்க்கம், பாணங்கள் முதலிய யந்திர முக்தமெனும் ஆயுதவர்க்கம், இப்படியாகிய ஆயுதவர்க்கம்,
கிம் - எத்தன்மையானது?

इत्युक्ता राक्षसेन्द्रेण राक्षसी क्रोधमूर्च्छिता ।
ततो रामं यथातत्त्वमाख्यातुमुपचक्रमे ॥

இத்யுக்தா ராக்ஷஸேந்த்ரேண ராக்ஷஸீ க்ரோத மூர்ச்சிதா ।
ததோ ராமம் யதாதத்வ மாக்யாது முபசக்ரமே ॥ 4

ராக்ஷஸஸேந்த்ரேண - ராக்ஷஸ மன்னனால்
இதி - மேற்கண்டவாறு
உக்தா - வினாவப்பட்ட
ராக்ஷஸீ - அரக்கி
தத: - அப்பொழுது
க்ரோத மூர்ச்சிதா - கோபத்தால் மெய்மறந்தவளாகி
ராமம் - ராமரைப்பற்றி
யதா தத்வம் - உள்ளபடி
ஆக்யாதும் - பின்வருமாறு சொல்ல
உபசக்ரமே - தலைப்பட்டாள்.

दीर्घबाहुर्विशालाक्षश्चीरकृष्णाजिनाम्बरः ।
कंदर्पसमरूपश्च रामो दशरथात्मजः ॥

தீர்கபாஹுர் விஶாலாக்ஷஶ்சீர க்ருஷ்ணாஜிநாம்பர: ।
கந்தர்பஸமரூபஶ்ச ராமோ தஶரதாத்மஜ: ॥ 5

ராம: - ராமனென்பவன்,
தஶரதாத்மஜ: - தசரதனென்பவனின் மகன்,
தீர்கபாஹு: - நீண்ட கைகளையுடையவன்,
விஶாலாக்ஷ: - விசாலமான கண்களையுடையவன்,
சீரக்ருஷ்ணாஜிநாம்பர: - மரவுரி, மாந்தோலுடுத்தவன்,
கந்தர்ப ஸமரூப: ச - அழகு வாய்ந்தவன்.



शक्रचापनिभं चापं विकृष्य कनकाङ्गदम् ।
दीप्तान् क्षिपति नाराचान् सर्पानिव महाविषान् ॥

ஶக்ரசாபநிபம் சாபம் விக்ருஷ்ய கனகாங்கதம் ।
தீப்தாந் க்ஷிபதி நாராசான் ஸர்பாநிவ மஹாவிஷான் ॥ 6

ஶக்ரசாபநிபம் - இந்திரனுடைய தனுசுக்கு ஒப்பானதும்,
கனகாங்கதம் - பொற்பூண் பூண்டதுமான
சாபம் - வில்லை
விக்ருஷ்ய - நாணேற்றி,
மஹாவிஷான் - கொடிய விஷமுள்ள
ஸர்பாந் இவ - சர்ப்பங்களை நிகர்த்த
தீப்தாந் - விஷ அனல் வீசும்
நாராசான் - நாராசமெனும் பாணங்களை
க்ஷிபதி - எய்கின்றனன்.

नाददानं शरान् घोरान्न मुञ्चन्तं शिलीमुखान् ।
न कार्मुकं विकर्षन्तं रामं पश्यामि संयुगे ॥

நாததானம் ஶரான் கோராந் ந முஞ்சந்தம் ஶிலீமுகான் ।
ந கார்முகம் விகர்ஷந்தம் ராமம் பஶ்யாமி ஸம்யுகே ॥ 7

ஸம்யுகே - போரில்
ராமம் - ராமனை
பஶ்யாமி - பார்க்கின்றேன்.
கார்முகம் விகர்ஷந்தம் - வில்லை வளைப்பவனாக
ந - உணரவில்லை.
கோராந் - கொடியவைகளும்,
ஶிலீமுகான் - கூரிய முனைகளையுடையவைகளுமான
ஶரான் - பாணங்களை
ஆததானம் - எடுப்பவனாக
ந - நான் உணரவில்லை.
முஞ்சந்தம் - விடுபவனாக
ந - நான் உணரவில்லை.

हन्यमानं तु तत् सैन्यं पश्यामि शरवृष्टिभिः ।
इन्द्रेणेवोत्तमं सस्यमाहतं त्वश्मवृष्टिभिः ॥

ஹன்யமாநம் து தத்ஸைன்யம் பஶ்யாமி ஶரவ்ருஷ்டிபி: ।
இந்த்ரேணேவோத்தமம் ஸஸ்யமாஹதம் த்வஶ்ம வ்ருஷ்டிபி: ॥ 8

து - ஆயினும்
தத் - அந்த
உத்தமம் ஸைன்யம் - சிறந்த படையை

ஶரவ்ருஷ்டிபி: - சரமாரிகளால்
இந்த்ரேண - இந்திரனால்
அஶ்மவ்ருஷ்டிபி: - கல்மாரிகளால்
ஆஹதம் - அழிக்கப்பட்ட
ஸஸ்யம் இவ - பயிரைபோல்
ஹன்யமாநம் து - மாண்டுவிழுகிறதாய் மட்டும்
பஶ்யாமி - பார்க்கிறேன்.

**रक्षसां भीमरूपाणां सहस्राणि चतुर्दश ।**
**निहतानि शरैस्तीक्ष्णैस्तेनैकेन पदातिना ॥**

ரக்ஷஸாம் பீமரூபாணாம் ஸஹஸ்ராணி சதுர்தஶ।
நிஹதானி ஶரைஸ்தீக்ஷ்ணைஸ்தேனைகேந பதாதிநா॥ 9

**अर्धाधिकमुहूर्तेन खरश्च सहदूषणः ।**
**ऋषीणामभयं दत्तं कृतक्षेमाश्च दण्डकाः ॥**

அர்தாதிக முஹூர்தேந கரஶ்ச ஸஹதூஷண:।
ரிஷீணாமபயம் தத்தம் க்ருதக்ஷேமாஶ்ச தண்டகா:॥ 10

பதாதிநா - பாதசாரியான
தேன - அவன்
ஏகேந - ஒருவனால்
அர்தாதிக முஹூர்தேந - ஒன்றரை முகூர்த்த காலத்தில்
தீக்ஷ்ணை: ஶரை: - கூரிய பாணங்களால்
ஸஹதூஷண: - தூஷணனோடுகூடின
கர: ச - கரனும்,
பீமரூபாணாம் - பயங்கரமான உருவங்களையுடைய
ரக்ஷஸாம் - அரக்கர்களின்
சதுர்தஶ - பதினான்கு
ஸஹஸ்ராணி - ஆயிரவர்களும்,
நிஹதானி - கொல்லப்பட்டார்கள்.
ரிஷீணாம் - ருஷிகளுக்கு
அபயம் - அபயம்
தத்தம் - கொடுக்கப்பட்டது.
தண்டகா: ச - தண்டகாவனங்களும்
க்ருதக்ஷேமா: - இன்புற்று வாழ செய்யப்பட்டிருக்கின்றன.

**एका कथंचिन्मुक्ताहं परिभूय महात्मना ।**
**स्त्रीवधं शङ्कमानेन रामेण विदितात्मना ॥**

ஏகா கதஞ்சின் முக்தாஹம் பரிபூய மஹாத்மநா।
ஸ்த்ரீவதம் ஶங்கமானேன ராமேண விதிதாத்மநா॥ 11



விதிதாத்மநா - சர்வக்ஞனும்
மஹாத்மநா - மகாத்மாவுமான
ராமேண - ராமனால்
ஸ்த்ரீவதம் - பெண்கொலையை
ஶங்கமானேன - வெறுப்பவனாய்
அஹம் - நான்
ஏகா - ஒருவள்
கதஞ்சித் - வருத்தப்பட்டு
பரிபூய - அங்கபங்கம் பண்ணப்பட்டு,
முக்தா - உயிருடன் விடப்பட்டேன்.

**भ्राता चास्य महातेजा गुणतस्तुल्यविक्रमः ।**
**अनुरक्तश्च भक्तश्च लक्ष्मणो नाम वीर्यवान् ॥**

ப்ராதா சாஸ்ய மஹாதேஜா குணதஸ் துல்யவிக்ரம:।
அநுரக்தஶ்ச பக்தஶ்ச லக்ஷ்மணோ நாம வீர்யவான்॥ 12

**अमर्षी दुर्जयो जेता विक्रान्तो बुद्धिमान् बली ।**
**रामस्य दक्षिणो बाहुर्नित्यं प्राणो बहिश्चरः ॥**

அமர்ஷீ துர்ஜயோ ஜேதா விக்ராந்தோ புத்திமான் பலீ।
ராமஸ்ய தக்ஷிணோ பாஹுர் நித்யம் ப்ராணோ பஹிஶ்சர:॥ 13

அஸ்ய - இந்த
ராமஸ்ய - ராமனுக்கு
தக்ஷிண: - வலது
பாஹு: - கையாகிறவனும்,
நித்யம் - எப்பொழுதும்
பஹிஶ்சர: - வெளியில் சஞ்சரிக்கும்
ப்ராண: ச - உயிராகிறவனுமான
ப்ராதா - தம்பி
லக்ஷ்மண: நாம - லக்ஷ்மணனென்பவன்
மஹாதேஜா: - மகா தேஜஸ்வி.
குணத: - குணங்களுக்கு
துல்யவிக்ரம: - ஏற்ற பராக்கிரமத்தையுடையவன்.
அநுரக்த: ச - இடைவிடாத விச்வாஸமுள்ளவன்.
பக்த: ச - பக்தன்.
வீர்யவான் - பராக்ரமசாலி.
அமர்ஷீ - மேற்கொண்ட காரியத்தை முற்றிலும் முடிக்க சாகசமுடையவன்.
துர்ஜய: - பிறரால் ஜெயிக்க முடியாதவன்.
ஜேதா - பிறர்களை ஜெயிக்கின்றவன்.

விக்ராந்த: - யுத்தவீரன்.
புத்திமான் - புத்திமான்.
பலீ - பலவான்.

रामस्य तु विशालाक्षी पूर्णेन्दुसदृशानना ।
धर्मपत्नी प्रिया भर्तुर्नित्यं प्रियहिते रता ॥

ராமஸ்ய து விஶாலாக்ஷீ பூர்ணேந்து ஸத்ருஶாநநா ।
தர்மபத்நீ ப்ரியா பர்துர் நித்யம் ப்ரியஹிதே ரதா ॥ 14

सा सुकेशी सुनासोरुः सुरूपा च यशस्विनी ।
देवतेव वनस्यास्य राजते श्रीरिवापरा ॥

ஸா ஸுகேஶீ ஸுநாஸோரு: ஸுரூபா ச யஶஸ்விநீ ।
தேவதேவ வனஸ்யாஸ்ய ராஜதே ஶ்ரீரிவாபரா ॥ 15

तप्तकाञ्चनवर्णाभा रक्ततुङ्गनखी शुभा ।
सीता नाम वरारोहा वैदेही तनुमध्यमा ॥

தப்தகாஞ்சனவர்ணாபா ரக்ததுங்கநகீ ஶுபா ।
ஸீதா நாம வராரோஹா வைதேஹீ தநுமத்யமா ॥ 16

ராமஸ்ய - ராமனுக்கு
தர்மபத்நீ - தர்மபத்னீ,
வைதேஹீ - விதேஹமன்னன் புதல்வியாகிய
ஸீதா நாம - ஸீதையென்பவள்,
விஶாலாக்ஷீ - விசாலமான கண்களையுடையவள்,
பூர்ணேந்து ஸத்ருஶாநநா- பூர்ண சந்திரன் போன்ற முகமுடையவள்,
பர்து: - கணவனுக்கு
ப்ரியா - இஷ்டயாய்
ப்ரியஹிதே து - கணவனது நன்மையிலேயே
நித்யம் - எப்பொழுதும்
ரதா - ஊக்கமுடையவள்.
ஸா - அவள்,
ஸுகேஶீ - அழகிய கூந்தலுடையவள்.
ஸுநாஸோரு: - அழகிய மூக்கும் துடையுமுடையவள்.
ஸுரூபா ச - சர்வ லக்ஷணங்களமயப்பெற்று சுந்தரியென
யஶஸ்விநீ - பெரும் புகழ்பெற்றவள்,
தேவதா - தெய்வப்பெண்
இவ - போன்றவள்,
அஸ்ய வனஸ்ய - இந்த அரண்யத்திற்கு
அபரா - இரண்டாவது
ஶ்ரீ:இவ - லக்ஷ்மிபோலவே



ராஜதே - விளங்குகிறாள்.
தப்த காஞ்சன வர்ணாபா- உருக்கின தங்கநிறமுற்ற காந்திகொண்டு விளங்குகிறவள்.
ரக்த துங்கநகீ - சிவந்து உயர்ந்த நகங்களையுடையவள்.
ஶுபா - தேஜோமயமாய் விளங்குகிறவள்.
வராரோஹா - அழகுவாய்ந்த நிதம்பங்களையுடையவள்.
தநுமத்யமா - மெல்லிய இடையையுடையாள்.

नैव देवी न गन्धर्वी न यक्षी न च किन्नरी ।
नैवंरूपा मया नारी दृष्टपूर्वा महीतले ॥

நைவ தேவீ ந கந்தர்வீ ந யக்ஷீ ந ச கிந்நரீ ।
நைவம்ரூபா மயா நாரீ த்ருஷ்ட பூர்வா மஹீதலே ॥ 17

தேவீ ஏவ - தெய்வப்பெண்ணும்
ந - இல்லை.
கந்தர்வீ - கந்தர்வப்பெண்ணும்
ந - இல்லை.
யக்ஷீ - யக்ஷகன்னிகையும்
ந - இல்லை.
கிந்நரீ ச - கின்னரப்பெண்ணும்
ந - இல்லை.
மஹீதலே - பூலோகத்தில்
மயா - என்னால்
ஏவம் ரூபா - இப்படிப்பட்ட அழகுவாய்ந்த
நாரீ - மானிடப்பெண்
த்ருஷ்ட பூர்வா ந - பார்க்கப்படவில்லை.

यस्य सीता भवेद्भार्या यं च हृष्टा परिष्वजेत् ।
अतिजीवेत् स सर्वेषु लोकेष्वपि पुरन्दरः ॥

யஸ்ய ஸீதா பவேத் பார்யா யம் ச ஹ்ருஷ்டா பரிஷ்வஜேத் ।
அதிஜீவேத் ஸ ஸர்வேஷு லோகேஷ்வபி புரந்தர: ॥ 18

யஸ்ய - எவனுக்கு
ஸீதா - சீதை
பார்யா - மனைவியாக
பவேத் - ஆகுவளோ;
யம் - எவனை
ஹ்ருஷ்டா ச - மனத்திருப்தி கொண்டவளாய்
பரிஷ்வஜேத் - ஆலிங்கனம் செய்வளோ;
ஸ: - அவன்
ஸர்வேஷு லோகேஷு - எல்லா உலகங்களிலும்

புரந்தர: இவ - இந்திரன்போலவே
அதிஜீவேத் - மேன்மைபெற்று விளங்குவான்.

सा सुशीला वपुःश्लाघ्या रूपेणाप्रतिमा भुवि ।
तवानुरूपा भार्या स्यात्त्वं च तस्यास्तथा पतिः ॥

ஸா ஸுஶீலா வபு:ஶ்லாக்யா ரூபேணாப்ரதிமா புவி ।
தவானுரூபா பார்யா ஸ்யாத் த்வம் ச தஸ்யாஸ்ததா பதி: ॥ 19

ஸா - அவள்,
ஸுஶீலா - சத்குணமுள்ளவள்.
வபுஶ்ஶ்லாக்யா - குற்றமற்ற அவயவங்களையுடையவள்.
புவி - பூலோகத்தில்
ரூபேண - அழகில்
அப்ரதிமா - ஒப்பற்றவள்.
தவ - உனக்கு
அநுரூபா - சரியான
பார்யா - மனைவியாக
ஸ்யாத் - இருப்பாள்.
தஸ்யா: - அவளுக்கு
த்வம் ச - நீ தான்
ததா - அப்படியே ஏற்ற
பதி: - கணவன்.

तां तु विस्तीर्णजघनां पीनश्रोणिपयोधराम् ।
भार्यार्थे च तवानेतुमुद्यताहं वराननाम् ॥
विरूपितास्मि क्रूरेण लक्ष्मणेन महाभुज ॥

தாம் து விஸ்தீர்ணஜகநாம் பீநஶ்ரோணி பயோதராம் ।
பார்யார்தே ச தவாநேது முத்யதாஹம் வராநநாம் ।
விரூபிதாஸ்மி க்ரூரேண லக்ஷ்மணேன மஹாபுஜ ॥ 21

மஹாபுஜ - பெரிய புஜங்களையுடையவனே!
விஸ்தீர்ணஜகநாம் - அகன்ற நிதம்பங்களின் முன்தட்டையுடையவளும்,
பீநஶ்ரோணி - தசைப்பற்றுள்ள நிதம்பங்களையும்
பயோதராம் ச ஸ்தனங்களையுமுடையவளும்,
வராநநாம் து - அழகுவாய்ந்த முகமுடையவளுமான
தாம் - அவளை
தவ - உனக்கு
பார்யார்தே - மனைவியாக செய்வதற்காக
ஆநேதும் - கொண்டுவர,
உத்யதா அஹம் - முயன்ற நான்
க்ரூரேண - துஷ்ட



லக்ஷ்மணேன - லக்ஷ்மணனால்
விரூபிதா அஸ்மி - அங்கபங்கம் பண்ணப்பட்டேன்.

तां तु दृष्ट्वाद्य वैदेहीं पूर्णचन्द्रनिभाननाम् ।
मन्मथस्य शराणां वै त्वं विधेयो भविष्यसि ॥

தாம் து த்ருஷ்ட்வாத்ய வைதேஹீம் பூர்ணசந்த்ர நிபாநநாம் ।
மன்மதஸ்ய ஶராணாம் வை த்வம் விதேயோ பவிஷ்யஸி ॥ 22

பூர்ண சந்த்ர நிபாநநம்-
பூர்ணசந்திரனை ஒத்த முகமுடைய
தாம் - அந்த
வைதேஹீம் - வைதேகியை
அத்ய - இப்பொழுது
த்வம் - நீ
த்ருஷ்ட்வா து - பார்த்தால்,
மன்மதஸ்ய - மன்மதனது
ஶராணாம் வை - பாணங்களுக்கு
விதேய: - அடிமையாக
பவிஷ்யஸி - ஆகிவிடுவாய்.

यदि तस्यामभिप्रायो भार्यार्थे तव जायते ।
शीघ्रमुद्धियतां पादो जयार्थमिह दक्षिणः ॥

யதி தஸ்யாமபிப்ராயோ பார்யார்தே தவ ஜாயதே ।
ஶீக்ர முத்த்ரியதாம் பாதோ ஜயார்தமிஹ தக்ஷிண: ॥ 23

தவ - உனக்கு
தஸ்யாம் - அவள் விஷயத்தில்
பார்யார்தே - மனைவியாக ஆக்கிக்கொள்வதில்
அபிப்ராய: - அபிப்ராயம்
ஜாயதே யதி - உண்டாயிருக்கும் பக்ஷத்தில்
இஹ - இவ்விடத்திலேயே
ஶீக்ரம் - உடனே
ஜயார்தம் - காரியம் கைகூடும் பொருட்டு
தக்ஷிண: - வலது
பாத: - கால்
உத்த்ரியதாம் - தூக்கி வைக்கப்படட்டும்.

कुरु प्रियं तथा तेषां रक्षसां राक्षसेश्वर ।
वधात्तस्य नृशंसस्य रामस्याश्रमवासिनः ॥

குரு ப்ரியம் ததா தேஷாம் ரக்ஷஸாம் ராக்ஷஸேஶ்வர ।
வதாத் தஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ராமஸ்யாஶ்ரமவாஸிந: ॥ 24

ராக்ஷஸேஸ்வர - ராக்ஷஸமன்னா!
ததா - அப்படியே
ஆஶ்ரமவாஸிந: - ஆச்ரமத்தில் வசிக்கின்றவனும்
ந்ருஶம்ஸஸ்ய - அற்பனுமான
தஸ்ய - அந்த
ராமஸ்ய - ராமனுடைய
வதாத் - வதையால்
தேஷாம் - அந்த
ரக்ஷஸாம் - அரக்கர்களுக்கு
ப்ரியம் - விச்வாஸத்தை
குரு - காட்டு.

तं शरैर्निशितैर्हत्वा लक्ष्मणं च महारथम् ।
हतनाथां सुखं सीतां यथावदुपभोक्ष्यसे ॥

தம் ஶரைர் நிஶிதைர் ஹத்வா லக்ஷ்மணம் ச மஹாரதம் ।
ஹதநாதாம் ஸுகம் ஸீதாம் யதாவதுபபோக்ஷ்யஸே ॥ 25

நிஶிதை: - 'கூரிய
ஶரை: - பாணங்களால்
தம் - அவனையும்,
மஹாரதம் - மகாவீரனாகிய
லக்ஷ்மணம் ச - லக்ஷ்மணனையும்,
ஹத்வா - கொன்றுவிட்டு,
ஹதநாதாம் - கணவனையிழந்த
ஸீதாம் - சீதையை
யதாவத் - முறைப்படி
ஸுகம் - கவலையின்றி
உபபோக்ஷ்யஸே - நீ சொந்தமாக்கிக் கொள்வாயாக.

रोचते यदि ते वाक्यं ममैतद्राक्षसेश्वर ।
क्रियतां निर्विशङ्केन वचनं मम रावण ॥

ரோசதே யதி தே வாக்யம் மமைதத் ராக்ஷஸேஸ்வர ।
க்ரியதாம் நிர்விஶங்கேந வசனம் மம ராவண ॥ 26

ராக்ஷஸேஸ்வர - 'அரக்கவேந்தே!
ராவண - ராவணா!
மம - எனது
ஏதத் - இந்த
வாக்யம் - சொல்
தே - உனக்கு
ரோசதே யதி - ஹிதமெனத் தோன்றுமாகில்
மம - எனது
வசனம் - சொல்லானது
நிர்விஶங்கேந - அச்சமின்றி
க்ரியதாம் - செய்யப்படட்டும்.



विज्ञायेहात्मशक्तिं च ह्रियतामबला बलात् ।
सीता सर्वानवद्याङ्गी भार्यार्थे राक्षसेश्वर ॥

விஞாயேஹாத்ம ஶக்திம் ச ஹ்ரியதா மபலா பலாத் ।
ஸீதா ஸர்வாநவத்யாங்கீ பார்யார்தே ராக்ஷஸேஸ்வர ॥ 27

ராக்ஷஸேஸ்வர - 'அரக்கர் அரசே!
இஹ - இப்பொழுது
ஆத்ம ஶக்திம் - உனது பலத்தை
விஞாய - எண்ணி,
அநவத்யாங்கீ - தோஷரஹித அவயவங்களையுடைய
ஸீதா - சீதை
அபலா - காப்பவர்களையிழந்தவளாய்
தவ - உனக்கு
பார்யார்தே - மனைவியாக்கிக் கொள்வதற்காக
பலாத் ச - பலாத்காரமாக
ஹ்ரியதாம் - எடுத்துக்கொண்டு வரப்படட்டும்.

निशम्य रामेण शरैरजिह्मगैर्हताञ्जनस्थानगतान्निशाचरान् ।
खरं च बुद्ध्वा निहतं च दूषणं त्वमत्र कृत्यं प्रतिपत्तुमर्हसि ॥

நிஶம்ய ராமேண ஶரைரஜிம்ஹகைர்
ஹதாஞ்ஜனஸ்தாந கதாந் நிஶாசரான் ।
கரம் ச புத்த்வா நிஹதம் ச தூஷணம்
த்வமத்ர க்ருத்யம் ப்ரதிபத்துமர்ஹஸி ॥ 28

ராமேண - 'ராமனால்
அஜிம்ஹகை: - குறிதப்பாது பாயவல்ல
ஶரை: - பாணங்களால்
ஜனஸ்தாந கதாந் - ஜனஸ்தானத்திலிருந்த
நிஶாசரான் - அரக்கர்களை
ஹதான் - மாண்டவர்களாக
நிஶம்ய - கேட்டும்,
கரம் - கரனை
நிஹதம் - கொல்லப்பட்டவனாகவும்
தூஷணம் ச - தூஷணனையும்
ச - அப்படியே கொல்லப்பட்டவனாகவும்
புத்த்வா - தெரிந்துகொண்டு,
த்வம் அத்ர - நீ இவ்விஷயத்தில்
க்ருத்யம் - இனி செய்யவேண்டிய காரியத்தை
ப்ரதிபத்தும் - செய்வதற்கு
அர்ஹஸி - தீர்மானிக்கக் கடவாய்.'

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே*
*ஸீதாஹரணோபதேஶோ நாம சதுஸ்த்ரிம்ஶ: ஸர்க: ॥*

பஞ்சத்ரிம்ஸ: ஸர்க: - 35

**ततः शूर्पणखावाक्यं तच्छ्रुत्वा रोमहर्षणम् ।**
**सचिवानभ्यनुज्ञाय कार्यं बुद्ध्वा जगाम सः ॥**

தத: ஶூர்பணகாவாக்யம் தச்ச்ருத்வா ரோமஹர்ஷணம் ।
ஸசிவாநப்யநுஜ்ஞாய கார்யம் புத்த்வா ஜகாம ஸ: ॥ 1

ஸ: - அவன்
ரோம ஹர்ஷணம் - மயிர்க்கூச்செறியும்படியான
தத் - அந்த
ஶூர்பணகா வாக்யம் - சூர்பணகையின் மொழியை
ஶ்ருத்வா - கேட்டு,
தத: - அதன்பின்னர்
ஸசிவாந் - மந்திரிமார்களை
அப்யநுஜ்ஞாய - விடைகொடுத்தனுப்பி
கார்யம் - ஆகவேண்டிய காரியத்தைப் பற்றி
புத்த்வா ஜகாம - தனியே பின்வருமாறு ஆலோசனை செய்தான்.

**तत्कार्यमनुगम्याथ यथावदुपलभ्य च ।**
**दोषाणां च गुणानां च संप्रधार्य बलाबलम् ॥**

தத் கார்யமநுகம்யாத யதாவதுபலப்ய ச ।
தோஷாணாம் ச குணாநாம் ச ஸம்ப்ரதார்ய பலாபலம் ॥ 2

**इति कर्तव्यमित्येव कृत्वा निश्चयमात्मनः ।**
**स्थिरबुद्धिस्ततो रम्यां यानशालामुपागमत् ॥**

இதி கர்தவ்யமித்யேவ க்ருத்வா நிஶ்சயமாத்மன: ।
ஸ்திர புத்திஸ் ததோ ரம்யாம் யாநஶாலாமுபாகமத் ॥ 3

அத - பிறகு
தத் - அந்த
கார்யம் - நடைபெற்ற காரியத்தை
அநுகம்ய ச - ஒன்றின்பின் ஒன்றாய் நினைத்தும்,
தோஷாணாம் ச - குறைகளுடையவும்,
குணாநாம் ச - உபாயங்களுடையவும்
பலாபலம் - பலாபலத்தை
ஸம்ப்ரதார்ய - நன்கு சீர்தூக்கி,
யதாவத் ச - உள்ளபடி எல்லாவற்றையும்
உபலப்ய - அறிந்துகொண்டு,
இதி ஏவ - இதுதான்
கர்தவ்யம் இதி - செய்துமுடிக்கவேண்டியதென்று



ஆத்மன: - தனது
நிஶ்சயம் - தீர்மானத்தை
க்ருத்வா - செய்துகொண்டு,
தத: - அதனால்
ஸ்திர புத்தி: - புத்தியை அதில் நிலைநிறுத்தியவனாகிய அவன்
ரம்யாம் - அழகிய
யாநஶாலாம் - அச்வசாலைக்கு
ஜகாம ஹ - சென்றான்.

**यानशालां ततो गत्वा प्रच्छन्नो राक्षसाधिपः ।**
**सूतं संचोदयामास रथः संयोज्यतामिति ॥**

யாநஶாலாம் ததோ கத்வா ப்ரச்சந்நோ ராக்ஷஸாதிப: ।
ஸூதம் ஸஞ்சோதயாமாஸ ரத: ஸம்யோஜ்யதா மிதி ॥ 4

ராக்ஷஸாதிப: - ராக்ஷஸ மன்னன்,
யாநஶாலாம் - அச்வசாலைக்குள்
ப்ரச்சந்ந: - மறைந்து
கத்வா - சென்று,
தத: - அவ்விடத்தில்
ஸூதம் - சாரதியைப் பார்த்து
ரத: - 'ரதமானது
ஸம்யோஜ்யதாம் - சித்தம் பண்ணப்படட்டும்';
இதி - என்று
ஸஞ்சோதயாமாஸ - ஆக்ஞாபித்தான்.

**एवमुक्तः क्षणेनैव सारथिर्लघुविक्रमः ।**
**रथं संयोजयामास तस्याभिमतमुत्तमम् ॥**

ஏவமுக்த: க்ஷணேநைவ ஸாரதிர் லகுவிக்ரம: ।
ரதம் ஸம்யோஜயாமாஸ தஸ்யாபிமத முத்தமம் ॥ 5

ஏவம் - இப்படி
உக்த: - நியமனம் பெற்ற
ஸாரதி: - சாரதி
லகுவிக்ரம: - சுறுசுறுப்புற்றவனாய்
தஸ்ய - அவனுக்கு
அபிமதம் - இஷ்டமானதும்,
உத்தமம் - சிறந்ததுமான
ரதம் - ரதத்தை
க்ஷணேந ஏவ - நொடிப்பொழுதில்
ஸம்யோஜயாமாஸ - பூட்டினான்.

काञ्चनं रथमास्थाय कामगं रत्नभूषितम् ।
पिशाचवदनैर्युक्तं खरैः कनकभूषणैः ॥

காஞ்சனம் ரதமாஸ்தாய காமகம் ரத்நபூஷிதம் ।
பிஶாச வதனைர்யுக்தம் கரை: கனக பூஷணை: ॥ 6

मेघप्रतिमनादेन स तेन धनदानुजः ।
राक्षसाधिपतिः श्रीमान् ययौ नदनदीपतिम् ॥

மேக ப்ரதிமநாதேந ஸ தேந தநதாநுஜ: ।
ராக்ஷஸாதி பதி: ஸ்ரீமான் யயௌ நதநதீபதிம் ॥ 7

தநதாநுஜ: - குபேரனது தம்பியும்,
ராக்ஷஸாதிபதி: - அரக்கர் மன்னனும்,
ஸ்ரீமான் - ஸ்ரீமானுமாகிய
ஸ: - அவன்,
காஞ்சனம் - பொன்னால் செய்யப்பட்டதும்,
ரத்ந பூஷிதம் - ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதும்,
பிஶாச வதனை: - பிசாசு போன்ற முகங்களுடையவைகளும்
கனக பூஷணை: - பொன்னாலலங்கரிக்கப்பட்டவைகளுமான
கரை: - கோவேறு கழுதைகளால்
யுக்தம் - பூட்டப்பட்டதும்,
காமகம் - நினைத்தவிடமெல்லாம் செல்ல வல்லதுமான
ரதம் - ரதத்தில்
ஆஸ்தாய - ஏறிக்கொண்டு,
மேக ப்ரதிம நாதேந- மேகத்தை நிகர்த்த கோஷமுடைய
தேந - அதைக்கொண்டே
நதநதீபதிம் - சமுத்திரத்தையும்
யயௌ - கடந்தான்.

स श्वेतवालव्यजनः श्वेतच्छत्रो दशाननः ।
स्निग्धवैदूर्यसंकाशस्तप्तकाञ्चनकुण्डलः ॥

ஸ ஶ்வேதவாலவ்யஜன: ஶ்வேதச் சத்ரோ தஶாநந: ।
ஸ்நிக்தவைதூர்ய ஸங்காஶஸ்தப்த காஞ்சன குண்டல: ॥ 8

विंशद्भुजो दशग्रीवः दर्शनीयपरिच्छदः ।
त्रिदशारिर्मुनीन्द्रघ्नो दशशीर्ष इवाद्रिराट् ॥

விம்ஶத்புஜோ தஶக்ரீவ: தர்ஶநீய பரிச்சத: ।
த்ரிதஶாரிர் முநீந்த்ரக்நோ தஶஶீர்ஷ இவாத்ரிராட் ॥ 9

कामगं रथमास्थाय शुशुभे राक्षसेश्वरः ।
विद्युन्मण्डलवान् मेघः सबलाक इवाम्बरे ॥



காமகம் ரதமாஸ்தாய ஶுஶுபே ராக்ஷஸேஶ்வர: ।
வித்யுந் மண்டலவான் மேக: ஸபலாக இவாம்பரே ॥ 10

ஶ்வேத வாலவ்யஜன:- வெண்சாமரங்களால் வீசப்பெற்றவனும்,
ஶ்வேதச் சத்ர: - வெண்குடை பிடிக்கப்பெற்றவனும்,
தஶாநந: - பத்து முகங்களுடையவனும்,
ஸ்நிக்த வைதூர்ய ஸங்காஸ: - நீரோட்டமுள்ள வைடூர்யத்தை நிகர்த்தவனும்,
தப்த காஞ்சன குண்டல:- சுத்த தங்க குண்டலங்களையணிந்தவனும்,
விம்ஶத் புஜ: - இருபது கைகளையுடையவனும்,
தஶக்ரீவ: - பத்து கழுத்துகளையுடையவனும்,
தர்ஶநீய பரிச்சத: - கண்களைக்கவரும் ஆடைகளைத்தரித்தவனும்,
த்ரிதஶாரி: - தேவசத்துருவும்,
முநீந்த்ரக்ந: - மகரிஷிகளை ஹிம்சிப்பவனும்,
தஶஶீர்ஷ: - பத்து சிகரங்களையுடைய
அத்ரிராட் இவ - மாமலை போன்றவனும்,
ராக்ஷஸேஶ்வர: - ராக்ஷஸ மன்னனுமாகிய
ஸ: - அவன்,
காமகம் - நினைத்தவிடமெல்லாம் செல்லவல்ல
ரதம் - ரதத்தில்
ஆஸ்தாய - ஏறிக்கொண்டு,
அம்பரே - ஆகாயத்தில்
வித்யுந் மண்டலவான்- மின்னல் வரிசைகளையுடையதும்,
ஸபலாக: - கொக்குகளோடு கூடியதுமான
மேக: இவ - மேகம்போல்
ஶுஶுபே - திகழ்ந்தான்.

सशैलं सागरानूपं वीर्यवानवलोकयन् ।
नानापुष्पफलैर्वृक्षैरनुकीर्णं सहस्रशः ॥

ஸ ஶைலம் ஸாகராநூபம் வீர்யவாநவலோகயன் ।
நாநா புஷ்பபலைர் வ்ருக்ஷைரநுகீர்ணம் ஸஹஸ்ரஶ: ॥ 11

शीतमङ्गलतोयाभिः पद्मिनीभिः समन्ततः ।
विशालैराश्रमपदैर्वेदिमद्भिः समावृतम् ॥

ஶீதமங்களதோயாபி: பத்மிநீபி: ஸமந்தத: ।
விஶாலைராஶ்ரம பதைர் வேதிமத்பி: ஸமாவ்ருதம் ॥ 12

कदलीवनसंबाधं नालिकेरोपशोभितम् ।
सालैस्तालैस्तमालैश्च पुष्पितैस्तरुभिर्वृतम् ॥

கதலிவன விஸம்பாதம் நாளிகேரோபஶோபிதம் ।
ஸாலைஸ்தாலைஸ் தமாலைஶ்ச புஷ்பிதைஸ் தருபிர்வ்ருதம் ॥ 13

अत्यन्तनियताहारैः शोभितं परमर्षिभिः ।
नागैः सुपर्णैर्गन्धर्वैः किन्नरैश्च सहस्रशः ॥
அத்யந்த நியதாஹாரை: ஶோபிதம் பரமர்ஷிபி: ।
நாகை: ஸுபர்ணைர் கந்தர்வை: கிந்நரைஶ்ச ஸஹஸ்ரஶ: ॥ 14

आजैर्वैखानसैर्धूम्रै वालखिल्यैर्मरीचिपैः ।
जितकामैश्च सिद्धैश्च चारणैरुपशोभितम् ॥
ஆஜைர் வைகாநஸைர் தூம்ரைர் வாலகில்யைர் மரீசிபை: ।
ஜித காமைஶ்ச ஸித்தைஶ்ச சாரணைருபஶோபிதம் ॥ 15

दिव्याभरणमाल्याभिर्दिव्यरूपाभिरावृतम् ।
क्रीडारतिविधिज्ञाभिरप्सरोभिः सहस्रशः ॥
திவ்யாபரண மால்யாபிர் திவ்யரூபாபிராவ்ருதம் ।
க்ரீடாரதிவிதிஜ்ஞாபிரப்ஸரோபி: ஸஹஸ்ரஶ: ॥ 16

सेवितं देवपत्नीभिः श्रीमतीभिरुपासितम् ।
देवदानवसङ्घैश्च चरितं त्वमृताशिभिः ॥
ஸேவிதம் தேவபத்நீபி: ஶ்ரீமதீபி: உபா ஸிதம் ।
தேவதாநவஸங்கைஶ்ச சரிதம் த்வம்ருதாஶிபி: ॥ 17

हंसक्रौञ्चप्लवाकीर्णं सारसैः संप्रणादितम् ।
वैडूर्यप्रस्तरं रम्यं स्निग्धं सागरतेजसा ॥
ஹம்ஸ க்ரௌஞ்சப்லவாகீர்ணம் ஸாரஸை: ஸம்ப்ரணாதிதம் ।
வைடூர்ய ப்ரஸ்தரம் ரம்யம் ஸ்நிக்தம் ஸாகரதேஜஸா ॥ 18

पाण्डराणि विशालानि दिव्यमाल्ययुतानि च ।
तूर्यगीताभिजुष्टानि विमानानि समन्ततः ॥
பாண்டராணி விஶாலாநி திவ்யமால்யயுதாநி ச ।
தூர்ய கீதாபிஜுஷ்டாநி விமாநாநி ஸமந்தத: ॥ 19

तपसा जितलोकानां कामगान्यभिसंपतन् ।
गन्धर्वाप्सरसश्चैव ददर्श धनदानुजः ॥
தபஸா ஜித லோகாநாம் காமகாந்யபிஸம்பதன் ।
கந்தர்வாப்ஸரஸஶ்சைவ ததர்ஶ தநதாநு ஜ: ॥ 20

வீர்யவாந் - வீர்யவானாகிய
தநதாநுஜ: - குபேரன் தம்பியான அவன்,
ஸாகராநூபம் - சமுத்திரத்தின் அக்கரையை
ஸ ஶைலம் - பர்வதங்களுடன் விளங்கும்,



ஸஹஸ்ரஶ: - பலவிடங்களில்
நாநா புஷ்பபலை: - நானாவித புஷ்பங்களும் பலங்களுமுள்ள
வ்ருக்ஷை: - மரங்களால்
அநுகீர்ணம் - நிறைந்திருக்கிறதாயும்,
ஶீத மங்கள தோயாபி: - குளிர்ந்த ஆரோக்கியமான தீர்த்தங்களையுடைய
பத்மிநீபி: - தாமரை ஓடைகளாலும்
விஶாலை: - பெரிய
வேதிமத்பி: - யாக மேடைகளையுடைய
ஆஶ்ரம பதை: - ஆச்ரமங்களாலும்,
ஸமந்தத: - எங்கும்
ஸமாவ்ருதம் - திகழ்கின்றதாயும்,
கதலீ வன ஸம்பாதம் - வாழைத்தோட்டங்களால் நெருக்குற்றிருப்பதாயும்,
நாளிகேரோப ஶோபிதம் - தென்னை மரங்களால் அழகுவாய்ந்து விளங்குவதாயும்,
ஸாலை: - ஆச்சாமரங்களாலும்,
தாலை: - பனைமரங்களாலும்,
தமாலை: ச - தமாலமெனும் மரங்களாலும்,
ஸுபுஷ்பிதை: - நன்கு பூத்த
தருபி: ச - மரங்களாலும்,
ஶோபிதம் - அழகுவாய்ந்து விளங்கப்பெற்றதாயும்,
அத்யந்த நியதாஹாரை: - கடும் நியமமான ஆகாரங்களையுடைய
பரமர்ஷிபி: - மகரிஷிகளாலும்,
நாகை: - நாகர்களாலும்,
ஸுபர்ணை: - ஸுபர்ணர்களாலும்,
கந்தர்வை: - கந்தர்வர்களாலும்,
கிந்நரை: ச - கின்னரர்களாலும்,
அஜை: - கர்ப்பத்திலிருந்து பிறவாத
வைகாநஸை: - வைகானசர்களாலும்,
மாஷை: - மஷரென்பவரின் குலத்தில் பிறந்தவர்களாலும்,
வாலகில்யை: - வாலகில்யர்களாலும்,
மரீசிபை: - வெய்யிலை உணவாகக் கொள்ளும் மரீசபர்கள் என்பவர்களாலும்,
ஜித காமை: - சகலவித ஆசைகளையுமொழிந்த
ஸித்தை: ச - சித்தர்களாலும்,
சாரணை: ச - சாரணர்களாலும்,
ஸஹஸ்ரஶ: - பலவிடங்களிலும்
உபஶோபிதம் - அழகுவாய்ந்து விளங்கப்பெற்றதாயும்,
திவ்யாபரண மால்யாபி: - திவ்யமான ஆபரணங்களையும் பூமாலைகளையுமணிந்தவர்களும்,

திவ்யரூபாபி: - திவ்வியமான அழகுடையவர்களும்,
க்ரீடாரதிவிதிஞாபி: - சிரிப்புண்டாக்கும்வண்ணமாய் பேசுவதிலும் விளையாட்டில் பொழுதுபோக்கும் உபாயங்களை நன்கு அறிந்தவர்களுமான
அப்ஸரோபி: - அப்ஸரஸ்திரீகளால்
ஸஹஸ்ரஶ: - பலவிடங்களில்
ஆவ்ருதம் - நிறைந்துள்ளதாயும்,
ஸ்ரீமதீபி: - ஸ்ரீமதிகளான
தேவபத்நீபி: - தேவபத்தினிகளாலும்,
ஸேவிதம் - உலாவப்பெற்றதாயும்
ஶ்ரியா - அழகால்
வ்ருதம் - திகழ்கிறதாயும்,
தேவ தாநவ ஸங்கை: ச-தேவதானவக் கூட்டங்களாலும்
அம்ருதாஶிபி: து - அமிருதமுண்ணுபவர்களாலும்(தேவர்களாலும்)
சரிதம் - உலாவப்பெற்றதாயும்
ஹம்ஸ க்ரௌஞ்ச - அன்னங்கள், அன்றில்கள், நீர்காக்கைகள்
ப்லவாகீர்ணம் இவைகள் நிறைந்துள்ளதாயும்,
ஸாரஸை: - சாரசப்பறவைகளால்
ஸம்ப்ரணாதிதம் - ஒளியுற்று விளங்கப் பெற்றதாயும்,
வைடூர்ய ப்ரஸ்தரம் - வைடூர்யங்கள்ளநிகர்த்த கற்களை உடையதாயும்,
ஸாகர தேஜஸா - சமுத்திரதேஜஸ்ஸால்
ஸ்நிக்தம் - இனிமையாயிருக்கிறதாயும்,
ரம்யம் - அழகாயிருக்கிறதாயும்,
அவலோகயன் - கவுனித்துகொண்டே
பாண்டராணி - பழுப்புநிறமுள்ளவைகளும்,
விஶாலாநி - விசாலமானவைகளும்,
திவ்ய மால்ய - திவ்வியமான புஷ்பங்களால்
யுதாநி ச அலங்கரிக்கப்பட்டதும்,
தூர்ய கீதாபிஜுஷ்டாநி- வாத்தியங்களோடும் பாட்டுக்களோடும் விளங்குகிறவைகளும்,
காமகாநி - நினைத்தவிடம் செல்ல வல்லவைகளுமான
தபஸா - தவங்களின் பயனாய்
ஜிதலோகாநாம் - எல்லா லோகங்களையும் தன்வசமாக்கிக் கொண்டவர்களுடைய
விமாநாநி - விமானங்களை
ஸமந்தத: - எல்லா பக்கங்களிலும்
அபிஸம்பதன் ச - கடந்துகொண்டும்
கந்தர்வ அப்ஸரஸ: ஏவ- கந்தர்வ அப்ஸரஸ்திரீகளையும்
ததர்ஶ - கண்டான்.



निर्यासरससमूलानां चन्दनानां सहस्त्रशः ।
वनानि पश्यन् सौम्यानि घ्राणतृप्तिकराणि च ॥

நிர்யாஸரஸ மூலாநாம் சந்தநாநாம் ஸஹஸ்ரஶ: ।
வநாநி பஶ்யந் ஸௌம்யாநி க்ராணத்ருப்திகராணி ச ॥ 21

अगरूणां च मुख्यानां वनान्युपवनानि च ।
तक्कोलानां च जात्यानां फलानां च सुगन्धिनाम् ॥

அகரூணாம் ச முக்யாநாம் வநாந்யுபவநாநி ச ।
தக்கோலாநாம் ச ஜாத்யாநாம் பலாநாம் ச ஸுகந்திநாம் ॥ 22

पुष्पाणि च तमालस्य गुल्मानि मरिचस्य च ।
मुक्तानां च समूहानि शुष्यमाणानि तीरतः ॥

புஷ்பாணி ச தமாலஸ்ய குல்மாணி மரிசஸ்ய ச ।
முக்தாநாம் ச ஸமூஹாநி ஶுஷ்யமாணாநி தீரத: ॥ 23

शङ्खानां प्रस्तरं चैव प्रवालनिचयं तथा ।
काञ्चनानि च शैलानि राजतानि च सर्वशः ॥

ஶங்காநாம் ப்ரஸ்தரம் சைவ ப்ரவாளநிசயம் ததா ।
காஞ்சநாநி ச ஶைலாநி ராஜதாநி ச ஸர்வஶ: ॥ 24

प्रस्त्रवाणि मनोज्ञानि प्रसन्नानि ह्रदानि च ।
धनधान्योपपन्नानि स्त्रीरत्नैरावृतानि च ॥

ப்ரஸ்ரவாணி மனோஞானி ப்ரஸந்நாநி ஹ்ரதாநி ச ।
தன தான்யோபபந்நாநி ஸ்த்ரீரத்நை ராவ்ருதாநி ச ॥ 25

हस्त्यश्वरथगाढानि नगराण्यवलोकयन् ।
तं समं सर्वतः स्निग्धं मृदुसंस्पर्शमारुतम् ॥

ஹஸ்த்யஶ்வரதகாடாநி நகராண்யவலோகயன் ।
தம் ஸமம் ஸர்வத: ஸ்நிக்தம் ம்ருதுஸம்ஸ்பர்ஶமாருதம் ॥ 26

अनूपं सिन्धुराजस्य ददर्श त्रिदिवोपमम् ॥

அநூபம் ஸிந்துராஜஸ்ய ததர்ஶ த்ரிதிவோபமம் ।

நிர்யாஸரஸ மூலாநாம் - மட்டிப்பால் கொடுக்கும் வேர்களையுடைய மரங்களுடையவும்
சந்தநாநாம் - சந்தனவிருக்ஷங்களுடையவும்,
ஸௌம்யாநி - ஆரோக்கியமானவைகளும்,
க்ராணத்ருப்திகராணி- மிக மணங்கமழும்
வநாநி ச - சோலைகளையும்,

ஸஹஸ்ரஶ: - பலவிடங்களில்
பஶ்யந் - பார்த்துக்கொண்டே
முக்யாநாம் - சிறந்த
அகரூணாம் - அகில் விருக்ஷங்களுடையவும்
வநாநி - வனங்களையும்,
ஜாத்யாநாம் - சிறந்த
தக்கோலாநாம் ச - வால்மிளகுகளுடையவும்
ஸுகந்திநாம் - மணம்மிகுந்த
பலாநாம் ச - ஜாதிக்காய்களுடையவும்
உபவநாநி ச - உபவனங்களையும்,
தமாலஸ்ய - தமாலவிருக்ஷத்தின்
புஷ்பாணி ச - புஷ்பங்களையும்,
மரீசஸ்ய - மிளகின்
குல்மானி ச - புதர்களையும்,
தீரத: - கரைகளில்
முக்தாநாம் - முத்துக்களுடைய
ஶுஷ்ய மாணாநி - உலர்ந்துகொண்டிருந்த
ஸமூஹாநி ச - குவியல்களையும்,
ஶங்காநாம் - சங்குகளின்
ப்ரஸ்தரம் ச - குவியலையும்,
ப்ரவாள நிசயம் ஏவ - பவழக்குவியலையும்,
ஸர்வஶ: - அநேக
காஞ்சநாநி - பொன்
ராஜதாநி - வெள்ளி
ஶைலாநி ச - மலைகளையும்,
ததா - அப்படியே
மனோஞானி - அழகான
ப்ரஸந்நாநி - மலையருவிகளையும்,
ப்ரஸ்ரவாணி ச - தெளிவான
ஹ்ரதாநி ச - மடுக்களையும்,
தனதான்யோப பந்நாநி-தனதான்யங்கள் நிறைந்தவைகளும்,
ஸ்த்ரீ ரத்நை: - உத்தமஸ்திரீகளால்
ஆவ்ருதாநி - விளங்கப்பெற்றவைகளும்
ஹஸ்த்யஶ்வரதகாடாநி ச-யானைகள், குதிரைகள், ரதங்கள் இவைகளால் நிறைந்தவைகளுமான
நகராணி - நகரங்களையும்,
அவலோகயன் - பார்த்துக்கொண்டே
ஸிந்து ராஜஸ்ய - சமுத்திரத்தின்
தம் அநூபம் - அந்தக் கரையை



ஸர்வத: - எங்கும்
ஸமம் - சமமாயிருப்பதாயும்,
ஸ்நிக்தம் - இனிமையானதாயும்
ம்ருதுஸம்ஸ்பர்ஶ மாருதம் - காற்று மந்தமாய் வீசப்பெற்றதாயும்,
த்ரிதிவோபமம் - தேவலோகம்போல் விளங்குவதாயும்,
ததர்ஶ - கவனித்தான்.

तत्रापश्यत् स मेघाभं न्यग्रोधमृषिभिर्वृतम् ।
समन्ताद्यस्य ताः शाखाः शतयोजनमायताः ॥

தத்ராபஶ்யத் ஸ மேகாபம் ந்யக்ரோத ம்ருஷிபிர் வ்ருதம் ।
ஸமந்தாத்யஸ்ய தா: ஶாகா: ஶதயோஜனமாயதா: ॥ 27

ஸ: - அவன்
மேகாபம் - மேகத்தை நிகர்த்தும்,
ருஷிபி: - முனிவர்களால்
வ்ருதம் - சஞ்சரிக்கப்பெற்றதுமான
ந்யக்ரோதம் - ஓர் ஆலமரத்தை
தத்ர - அவ்விடத்தில்
அபஶ்யத் - கண்டான்.
யஸ்ய - அதினுடைய
தா: ஶாகா: - அந்த கிளைகள்
ஸமந்தாத் - நான்கு பக்கங்களிலும்
ஶதயோஜனம் ஆயத:- நூறு யோஜனை (அதாவது சுமார் 850 மைல்) பரவி நின்றன.

यस्य हस्तिनमादाय महाकायं च कच्छपम् ।
भक्षार्थं गरुडः शाखामाजगाम महाबलः ॥

யஸ்ய ஹஸ்திநமாதாய மஹாகாயம் ச கச்சபம் ।
பக்ஷார்தம் கருட: ஶாகாமாஜகாம மஹாபல: ॥ 28

மஹாபல: - மகா பலவானாகிய
கருட: - கருடபகவான்,
பக்ஷார்தம் - புசிப்பதற்காக
ஹஸ்திநம் - ஓர் யானையையும்,
மஹாகாயம் - பெருத்த உடலுடைய
கச்சபம் ச - ஓர் ஆமையையும்
ஆதாய - எடுத்துக்கொண்டு,
யஸ்ய ஶாகாம் - அதனது கிளைக்கு
ஆஜகாம - வந்துசேர்ந்தார்.

तस्य तां सहसा शाखां भारेण पतगोत्तमः ।
सुपर्णः पर्णबहुलां बभञ्ज च महाबलः ॥

தஸ்ய தாம் ஸஹஸா ஶாகாம் பாரேண பதகோத்தம: ।
ஸு பர்ண: பர்ணபஹுளாம் பபஞ்ஜ ச மஹாபல: ॥ 29

மஹாபல: - மகா பலவானும்,
பதகோத்தம: ச - பறவைகளிலுத்தமருமாகிய
ஸு பர்ண: - கருடபகவான்,
தஸ்ய - அதனது
பர்ணபஹுளாம் - இலைகள் செறிந்த
தாம் ஶாகாம் - அந்த கிளையை
பாரேண - பாரத்தால்
ஸஹஸா பபஞ்ஜ - சடக்கென முறித்தார்.

तत्र वैखानसा माषा वालखिल्या मरीचिपाः ।
आजा बभूवुर्धूम्राश्च सङ्गताः परमर्षयः ॥

தத்ர வைகானஸா மாஷா வாலகில்யா மரீசிபா: ।
ஆஜா பபூவுர் தூம்ராஶ்ச ஸங்கதா: பரமர்ஷய: ॥ 30

தத்ர - அதனடியில்
பரமர்ஷய: - மகரிஷிகளாகிய
வைகானஸா: - வைகாநஸர்,
மாஷா: - மாஷர்
வாலகில்யா: - வாலகில்யர்,
மரீசிபா: - மரீசிபர்,
அஜா: - அஜர்,
தூம்ரா: ச - தும்ரம் ஆகிய இவர்கள்
ஸங்கதா: - ஒன்றுகூடி
பபூவு: - இருந்தார்கள்.

तेषां दयार्थं गरुडस्तां शाखां शतयोजनाम् ।
भग्नामादाय वेगेन तौ चोभौ गजकच्छपौ ॥

தேஷாம் தயார்தம் கருடஸ்தாம் ஶாகாம் ஶதயோஜநாம் ।
பக்நமாதாய வேகேந தௌ சோபௌ கஜகச்சபௌ ॥ 31

एकपादेन धर्मात्मा भक्षयित्वा तदामिषम् ॥

ஏகபாதேந தர்மாத்மா பக்ஷயித்வா ததாமிஷம் ॥ 32

निषादविषयं हत्वा शाखया पतगोत्तमः ।
प्रहर्षमतुलं लेभे मोक्षयित्वा महामुनीन् ॥



நிஷாதவிஷயம் ஹத்வா ஶாகயா பதகோத்தம:।
ப்ரஹர்ஷ மதுலம் லேபே மோக்ஷயித்வா மஹாமுனீன் ॥ 33

பதகோத்தம: - பறவைகளில் உத்தமரும்
தர்மாத்மா - தர்மாத்மாவுமான
கருட: - கருடபகவான்,
தேஷாம் - அவர்களுக்கு
தயார்தம் - நன்மை புரிவதற்காக
தாம் - அந்த
ஶதயோஜநாம் - நூறுயோஜனை பரப்புற்ற
ஶாகாம் - கிளையையும்,
தௌ கஜகச்சபௌ - அந்த யானை ஆமைகளாகிற
உபௌ ச - இரண்டையும்
ஏகபாதேந - ஒரு காலால்
வேகேந - தன் சக்தியால்
ஆதாய - தாங்கிக்கொண்டு,
ததாமிஷம் - அவைகளினிறச்சியை
பக்ஷயித்வா - புசித்துவிட்டு,
மஹாமுனீன் - மகாமுனிவர்களை
மோக்ஷயித்வா - பெருமாபத்தினின்று விடுவித்துவிட்டு,
ஜகாம - திரும்பினார்.
ஶாகயா - கிளையைக்கொண்டு
நிஷாத விஷயம் - பரமசண்டாளர்களின் தேசமொன்றை
ஹத்வா அழித்து,
அதுலம் - அளவுகடந்த
ப்ரஹர்ஷம் - மனத்திருப்தியை
லேபே - அடைந்தார்.

स तेनैव प्रहर्षेण द्विगुणीकृतविक्रमः ।
अमृतानयनार्थं वै चकार मतिमान् मतिम् ॥

ஸ தேநைவ ப்ரஹர்ஷேண த்விகுணீக்ருத விக்ரம: ।
அம்ருதாநயநார்தம் வை சகார மதிமான் மதிம் ॥ 34

ஸ: மதிமான் - மகா புத்திமானாகிய அவர்,
தேந - அந்த
ப்ரஹர்ஷேண ஏவ - உத்ஸாஹத்தாலேயே
த்வி குணீக்ருத விக்ரம:- இரண்டுமடங்கு கொண்டு விளங்கும் பராக்கிரமமுடையவராகி
அம்ருதாநயநார்தம் வை- அமிருதத்தைக் கொண்டுவர வேண்டியதாய்
மதிம் சகார - எண்ணங்கொண்டார்.

अयोजालानि निर्मथ्य भित्त्वा रत्नमयं गृहम् ।
महेन्द्रभवनाद्गुप्तमाजहारामृतं ततः ॥

அயோஜாலாநி நிர்மத்ய பித்த்வா ரத்நமயம் க்ருஹம் ।
மஹேந்த்ர பவநாத் குப்த மாஜஹாராம்ருதம் தத: ॥ 35

தத: - அப்பொழுது
அயோஜாலாநி - இருப்புவலைகளை
நிர்மத்ய - அறுத்து,
ரத்நமயம் - ரத்னமயமான
க்ருஹம் - வீட்டை
பித்த்வா - பிளந்து,
குப்தம் - நன்கு ரக்ஷிக்கப்பட்ட
அம்ருதம் - அமிருதத்தை
மஹேந்த்ர பவநாத் - இந்திரனது திருமாளிகையிலிருந்து
ஆஜஹார - கொண்டுவந்தார்.

तं महर्षिगणैर्जुष्टं सुपर्णकृतलक्षणम् ।
नाम्ना सुभद्रं न्यग्रोधं ददर्श धनदानुजः ॥

தம் மஹர்ஷிகணைர் ஜுஷ்டம் ஸுபர்ணக்ருதலக்ஷணம் ।
நாம்நா ஸுபத்ரம் ந்யக்ரோதம் ததர்ஸ தநதாநுஜ: ॥ 36

தநதாநுஜ: - குபேரன் தம்பியாகுமவன்
மஹர்ஷிகணை: - மகர்ஷிகணங்களால்
ஜுஷ்டம் - தங்கியிருக்கப்பெற்றதும்,
ஸுபர்ணக்ருத லக்ஷணம் - கருடபகவானால் செய்யப்பட்ட அடையாளங்களையுடையதும்,
நாம்நா ஸுபத்ரம் - ஸுபத்திரமென்று பெயருடையதுமான
தம் - அந்த
ந்யக்ரோதம் - ஆலமரத்தை
ததர்ஸ - கண்டான்.

तं तु गत्वा परं पारं समुद्रस्य नदीपतेः ।
ददर्शाश्रममेकान्ते रम्ये पुण्ये वनान्तरे ॥

தம் து கத்வா பரம் பாரம் ஸமுத்ரஸ்ய நதீபதே: ।
ததர்ஸாஸ்ரம மேகாந்தே ரம்யே புண்யே வநாந்தரே ॥ 37

நதீபதே: - நதிகள் புகுமிடமாகிய
ஸமுத்ரஸ்ய - சமுத்திரத்தினுடைய
தம் - அந்த
பரம் பாரம் - அக்கரையை
கத்வா து - அடைந்த பின்னர்



ஏகாந்தே - ஏகாந்தமாய்
புண்யே - மனோகரமாய்
ரம்யே - அழகாயிருக்கின்ற
வநாந்தரே - வனப்பிரதேசத்தில்
ஆஸ்ரமம் - ஓர் ஆச்ரமத்தை
ததர்ஸ - கண்டான்.

तत्र कृष्णाजिनधरं जटावल्कलधारिणम् ।
ददर्श नियताहारं मारीचं नाम राक्षसम् ॥

தத்ர க்ருஷ்ணாஜிநதரம் ஜடாவல்கல தாரிணம் ।
ததர்ஸ நியதாஹாரம் மாரீசம் நாம ராக்ஷஸம் ॥ 38

தத்ர - அவ்விடத்தில்
க்ருஷ்ணாஜிநதரம் - மான்தோல்தரித்து
ஜடா வல்கல தாரிணம் - சடை தரித்து மரவுரியுடுத்து
நியதாஹாரம் - உணவைச் சுருக்கிய
மாரீசம் நாம - மாரீசனென்ற
ராக்ஷஸம் - ராக்ஷஸனை
ததர்ஸ - கண்டான்.

स रावणस्तं समागम्य विधिवत्तेन रक्षसा ।
मारीचेनार्चितो राजा सर्वकामैरमानुषैः ॥

ஸ ராவணஸ்தம் ஸமாகம்ய விதிவத் தேந ரக்ஷஸா ।
மாரீசேநார்சிதோ ராஜா ஸர்வகாமை ரமாநுஷை: ॥ 39

ஸ: - அந்த
ராஜா - அரசாகிய
ராவண: - ராவணன்,
ஸமாகம்ய - வந்துசேர்ந்து,
தேந - அந்த
மாரீசேந - மாரீசனெனும்
ரக்ஷஸா - அரக்கனால்
அமாநுஷை: - மனிதர்களுக்கு கிடைத்தற்கரிய
ஸர்வகாமை: - சகலவித போக்ய வஸ்துக்களால்
விதிவத் - முறைப்படி
அர்சித: - உபசரிக்கப்பட்டான்.

तं स्वयं पूजयित्वा तु भोजनेनोदकेन च ।
अर्थोपहितया वाचा मारीचो वाक्यमब्रवीत् ॥

தம் ஸ்வயம் பூஜயித்வா து போஜநேநோதகேந ச ।
அர்தோபஹிதயா வாசா மாரீசோ வாக்யமப்ரவீத் ॥ 40

மாரீச: - மாரீசன்,
ஸ்வயம் து - தானே

போஜநேந - போஜனத்தைக் கொண்டும்
உதகேந ச - தீர்த்தத்தைக் கொண்டும்
தம் - அவனை
பூஜயித்வா - உபசரித்து,
வாக்யம் - பின்வரும் மொழியை
அர்தோபஹிதயா - பொருள் பொதிந்த
வாசா - சொற்கொண்டு
அப்ரவீத் - மொழிந்தான்.

**कच्चित् सुकुशलं राजल्लँङ्कायां राक्षसेश्वर ।**
**केनार्थेन पुनस्त्वं वै तूर्णमेवमिहागतः ॥**

**கச்சித் ஸுகுஶலம் ராஜன் லங்காயாம் ராக்ஷஸேஶ்வர ।**
**கேநார்தேந புனஸ்த்வம் வை தூர்ணமேவமிஹாகத: ॥** 41

ராக்ஷஸேஶ்வர - 'ராக்ஷஸர்களை ஆளும்
ராஜன் - அரசே!
லங்காயாம் - இலங்கையில்
கச்சித் ஸுகுஶலம் - எல்லாம் க்ஷேமமா?
த்வம் - தேவரீர்
புன: வை - மீளவும்
ஏவம் தூர்ணம் - இவ்வளவு சீக்கிரமாய்
கேந அர்தேந - யாது நிமித்தம்
இஹ - இங்கு
ஆகத: - எழுந்தருளினீர்?'

**एवमुक्तो महातेजा मारीचेन स रावणः ।**
**ततः पश्चादिदं वाक्यमब्रवीद्वाक्यकोविदः ॥**

**ஏவமுக்தோ மஹாதேஜா மாரீசேந ஸ ராவண: ।**
**தத: பஶ்சாதிதம் வாக்யமப்ரவீத் வாக்ய கோவித: ॥** 42

மாரீசேந - மாரீசனால்
ஏவம் உக்த: - இவ்வாறு வினாவப்பட்டவனும்,
மஹாதேஜா: - மகா சூரனும்,
வாக்ய கோவித: - பேசுவதில் சமர்த்தனுமான
ஸ: - அந்த
ராவண: - ராவணன்
தத: பஶ்சாத் - அதன்பின்னர்
இதம் வாக்யம் - பின்வரும் சொல்லை
அப்ரவீத் - உரைத்தான்.

***இத்யார்ஷே ஶ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே***
***சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே***
***மாரீசாஶ்ரம புனர்கமனம் நாம பஞ்சத்ரிம்ஶ: ஸர்க: ॥***



## ஷட் த்ரிம்ஶ: ஸர்க: - 36

**मारीच श्रूयतां तात वचनं मम भाषतः ।**
**आर्तोऽस्मि मम चार्तस्य भवान् हि परमा गतिः ॥**

**மாரீச ஶ்ரூயதாம் தாத வசனம் மம பாஷத: ।**
**ஆர்தோऽஸ்மி மம சார்தஸ்ய பவான் ஹி பரமா கதி: ॥** 1

தாத - 'அப்பா!
மாரீச - மாரீச!
பாஷத: - சொல்லும்
மம - எனது
வசனம் - சொல்லானது
ஶ்ரூயதாம் - செவிகொடுத்து கேட்கப்படட்டும்,
ஆர்த: அஸ்மி - மனவேதனைப்படுகின்றவனாயிருக்கின்றேன்.
ஆர்தஸ்ய - கஷ்டப்படும்
மம ச - எனக்கோ
பவான் ஹி - நீ ஒருவன்தான்
பரமா - சர்வோத்திருஷ்டமாகிய
கதி: - தஞ்சம் (புகுமிடம்).

**जानीषे त्वं जनस्थानं भ्राता यत्र खरो मम ।**
**दूषणश्च महाबाहुः स्वसा शूर्पणखा च मे ॥**

**ஜாநீஷே த்வம் ஜனஸ்தானம் ப்ராதா யத்ர கரோ மம ।**
**தூஷணஶ்ச மஹாபாஹு: ஸ்வஸா ஶூர்பணகா ச மே ॥** 2

**त्रिशिराश्च महातेजा राक्षसः पिशिताशनः ।**
**अन्ये च बहवः शूरा लब्धलक्षा निशाचराः ॥**

**த்ரிஶிராஶ்ச மஹாதேஜா ராக்ஷஸ: பிஶிதாஶன: ।**
**அன்யே ச பஹவ: ஶூரா லப்தலக்ஷா நிஶாசரா: ॥** 3

**वसन्ति मन्त्रियोगेन अधिवासं च राक्षसाः ।**
**बाधमाना महारण्ये मुनीन् वै धर्मचारिणः ॥**

**வஸந்தி மந்த்ரியோகேந அதிவாஸம் ச ராக்ஷஸா: ।**
**பாதமாநா மஹாரண்யே முனீன் வை தர்மசாரிண: ॥** 4

**चतुर्दश सहस्राणि रक्षसां भीमकर्मणाम् ।**
**शूराणां लब्धलक्षाणां खरचित्तानुवर्तिनाम् ॥**

**சதுர்தஶ ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம் ।**
**ஶூராணாம் லப்தலக்ஷணாம் கரசித்தாநுவர்திநாம் ॥** 5

மம - 'எனது
ப்ராதா - தம்பியாகிய
கர: - கரனும்,
மஹாபாஹு: - மகாபாஹுவாகிய
தூஷண: ச - தூஷணனும்,
மே - எனது
ஸ்வஸா - தங்கையாகிய
ஶூர்பணகா ச - சூர்ப்பணகையும்,
மஹாதேஜா: - மகாபலசாலியும்
பிஶிதாஶன: - மாம்சத்தை புசிக்கும்
ராக்ஷஸ: - அரக்கனாகிய
த்ரிஶிரா: ச - திரிசிரஸ்ஸும்,
அன்யே - மற்றுமுள்ள
பஹவ: - பல
லப்தலக்ஷா: - அஸ்த்ரவித்தையில் நிபுணர்களும்,
ஶூரா: - சூரர்களுமான
நிஶாசரா ச - 'அரக்கர்களும்,
பீம கர்மணாம் - பயங்கரமான செய்கைகளையுடையவர்களும்,
லப்த லக்ஷணாம் - அஸ்த்ரவித்தையில் நிபுணர்களும்
கரசித்தாநு வர்திநாம் - கரனுடைய இஷ்டம்போல் நடப்பவர்களும்,
ஶூராணாம் - சூரர்களுமாகிய
ரக்ஷஸாம் - அரக்கர்களின்
சதுர்தஶ - பதினான்கு
ஸஹஸ்ராணி ச - ஆயிரவர்களும்,
யத்ர - எந்த
மஹாரண்யே - மகாரண்யத்தில்
தர்ம சாரிண: - தர்மம் செய்யும்
முனீன் - முனிவர்களை
பாதமாநா: வை - ஹிம்சிக்கும்
ராக்ஷஸா: - அரக்கர்களாய்
மந்நியோகேந - எனது ஆக்கினையால்
ஜனஸ்தானம் - ஜனஸ்தானத்தை
அதிவாஸம் - வசிக்குமிடமாய்
வஸந்தி - கொண்டிருந்தார்களோ, அதை
த்வம் - நீ
ஜாநீஷே - அறிவாய்.

ते त्विदानीं जनस्थाने वर्तमाना महाबलाः ।
सङ्गताः परमायत्ता रामेण सह संयुगे ॥
नानाप्रहरणोपेताः खरप्रमुखराक्षसाः ॥



தே த்விதாநீம் ஜனஸ்தானே வர்த்தமாநா மஹாபலா: ।
ஸங்கதா: பரமாயத்தா ராமேண ஸஹ ஸம்யுகே
நாநா ப்ரஹரணோபேதா: கர ப்ரமுகராக்ஷஸா: ॥ 6
ஜனஸ்தானே - 'ஜனஸ்தானத்தில்
வர்தமாநா: - வசித்து வந்தவர்களும்
மஹாபலா: - மகாபலவான்களும்,
நாநாப்ரஹரணோபேதா: - பல ஆயுதங்களையுடையவர்களும்,
கர ப்ரமுக ராக்ஷஸா: - கரனைத்தலைமையாகவுடைய ராக்ஷஸர்களுமான
தே - அவர்கள்
ஸம்யுகே - போரில்
பரமாயத்தா: து - மிக உத்ஸாஹமுடையவர்களாகவே
ராமேண ஸஹ - ராமனோடுகூட
இதாநீம் - இப்பொழுது
ஸங்கதா: - கலந்தார்கள்.

तेन सञ्जातरोषेण रामेण रणमूर्धनि ।
अनुक्त्वा परुषं किञ्चिच्छरैर्व्यापारितं धनुः ॥

தேந ஸஞ்ஜாத ரோஷேண ராமேண ரண மூர்தநி ।
அநுக்த்வா பருஷம் கிஞ்சிச் சரைர்வ்யாபாரிதம் தநு: ॥ 7
ரணமூர்தநி - 'போர்முனையில்
ஸஞ்ஜாத ரோஷேண - சினங்கொண்ட
தேந - அந்த
ராமேண - ராமனால்
பருஷம் - கடும்சொல்
கிஞ்சித் - ஏதையும்
அநுக்த்வா - சொல்லாமல்,
தநு: - வில்லானது
ஶரை: - பாணங்களோடு
வ்யாபாரிதம் - பிணைக்கப்பட்டது.

चतुर्दश सहस्राणि रक्षसामुग्रतेजसाम् ।
निहतानि शरैस्तीक्ष्णैर्मानुषेण पदातिना ॥

சதுர்தஶ ஸஹஸ்ராணி ரக்ஷஸா முக்ர தேஜஸாம் ।
நிஹதாநி ஶரைஸ் தீக்ஷ்ணைர் மாநுஷேண பதாதிநா ॥ 8
உக்ரதேஜஸாம் - 'வெகு பலம்பொருந்திய
ரக்ஷஸாம் - அரக்கர்களின்
சதுர்தஶ - பதினான்கு
ஸஹஸ்ராணி - ஆயிரவர்கள்
பதாதிநா - பாதசாரியாகிய

மாநுஷேண - மானிடனால்
தீக்ஷ்ணை: - கூரிய
ஶரை: - பாணங்களால்
நிஹதாநி - கொல்லப்பட்டார்கள்.

**खरश्च निहतः संख्ये दूषणश्च निपातितः ।**
**हतश्च त्रिशिराश्चापि निर्भया दण्डकाः कृताः ॥**

**கரஶ்ச நிஹத: ஸங்க்யே தூஷணஶ்ச நிபாதித: ।**
**ஹதஶ்ச த்ரிஶிராஶ்சாபி நிர்பயா தண்டகா: க்ருதா: ॥** 9

ஸங்க்யே - 'போரில்
கர: ச - கரனும்
நிஹத: - கொல்லப்பட்டான்.
தூஷண: ச - தூஷணனும்
நிபாதித: - வீழ்த்தப்பட்டான்.
த்ரிஶிரா: ச - த்ரிசிரஸ்ஸும்
ஹத: - மாய்க்கப்பட்டான்.
தண்டகா: அபி - தண்டகாவனங்களும்
நிர்பயா: - பயமொழிந்தவைகளாய்
க்ருதா: ச - செய்யப்பட்டன.

**पित्रा निरस्तः क्रुद्धेन सभार्यः क्षीणजीवितः ।**
**स हन्ता तस्य सैन्यस्य रामः क्षत्त्रियपांसनः ॥**

**பித்ரா நிரஸ்த: க்ருத்தேந ஸபார்ய: க்ஷீணஜீவித: ।**
**ஸ ஹந்தா தஸ்ய ஸைன்யஸ்ய ராம: க்ஷத்ரியபாம்ஸன: ॥** 10

ஸ: ராம: - 'அந்த ராமன்,
க்ருத்தேந - சினங்கொண்ட
பித்ரா - தந்தையால்
ஸபார்ய: - பார்யையுடனே
நிரஸ்த: - துரத்தப்பட்டவன்.
க்ஷீண ஜீவித: - ஆயுள் குன்றியவன்.
தஸ்ய - அந்த
ஸைன்யஸ்ய - சைன்யத்தை
ஹந்தா - அழித்தவன்,
க்ஷத்ரியபாம்ஸன: - க்ஷத்ரியாதமன்.

**दुःशीलः कर्कशस्तीक्ष्णो मूर्खो लुब्धोऽजितेन्द्रियः ।**
**त्यक्तधर्मो ह्यधर्मात्मा भूतानामहिते रतः ॥**

**து:ஶீல: கர்கஶஸ் தீக்ஷ்ணோ மூர்கோ லுப்தோऽஜிதேந்த்ரிய: ।**
**த்யக்த தர்மோ ஹ்யதர்மாத்மா பூதாநாமஹிதே ரத: ॥** 11



து: ஶீல: - 'துர்நடத்தையுள்ளவன்
கர்கஶ: - இரக்கமற்றவன்.
தீக்ஷ்ண: - முரடன்.
மூர்க: - மூடன்.
லுப்த: - உலோபி.
அஜிதேந்த்ரிய: - இந்திரியநிக்ரஹமில்லாதவன்,
த்யக்த தர்ம: - தர்மானுஷ்டானமில்லாதவன்.
அதர்மாத்மா - தர்மசிந்தனையற்றவன்
பூதாநாம் - பிராணிகளுக்கு
அஹிதே ஹி - அஹிதத்திலேயே
ரத: - ஆஸக்தி கொண்டவன்.

**येन वैरं विनारण्ये सत्त्वमाश्रित्य केवलम् ।**
**कर्णनासापहरणाद्भगिनी मे विरूपिता ॥**

**யேந வைரம் விநாரண்யே ஸத்த்வமாஶ்ரித்ய கேவலம் ।**
**கர்ணநாஸாபஹரணாத் பகிநீ மே விரூபிதா ॥** 12

அரண்யே - 'காட்டில்
வைரம் விநா - பகையில்லாமலே
ஸத்த்வம் - பலத்தை
கேவலம் - ஸர்வமுமாய்
ஆஶ்ரித்ய - கொண்டு,
கர்ணநாஸாப ஹரணாத் - காதையும் மூக்கையும் அறுத்து
மே - எனது
பகிநீ - தங்கை
யேந - அவனால்
விரூபிதா - உருகுலைக்கப்பட்டாள்.

**तस्य भार्यां जनस्थानात् सीतां सुरसुतोपमाम् ।**
**आनयिष्यामि विक्रम्य सहायस्तत्र मे भव ॥**

**தஸ்ய பார்யாம் ஜனஸ்தாநாத் ஸீதாம் ஸுரஸுதோபமாம் ।**
**ஆனயிஷ்யாமி விக்ரம்ய ஸஹாயஸ்தத்ர மே பவ ॥** 13

தஸ்ய - 'அவனது
பார்யாம் - மனைவியும்,
ஸுர ஸுதோபமாம் - தேவப்பெண்ணுக்கொப்பானவளுமான
ஸீதாம் - சீதையை
ஜனஸ்தாநாத் - ஜனஸ்தானத்திலிருந்து
விக்ரம்ய - பலாத்கரித்து,
ஆனயிஷ்யாமி - எடுத்துவரப் போகிறேன்;
தத்ர - அதுவிஷயத்தில்

ராவணம் - ராவணனை
ஹிதம் - யாரோ ஒரு புண்யபுருஷனாக
த்ருஷ்ட்வா - எண்ணி,
ஸர்வை: - எல்லா
அதிதி ஸத்காரை: - விருந்தினருக்குரிய மரியாதைகளுடன்
பூஜயாமாஸ - உபசரித்தாள்.

उपनीयासनं पूर्वं पाद्येनाभिनिमन्त्र्य च ।
अब्रवीत्सिद्धमित्येव तदा तं सौम्यदर्शना ॥

உபநீயாஸனம் பூர்வம் பாத்யேநாபிநிமந்த்ர்ய ச ॥
அப்ரவீத் ஸித்த மித்யேவ ததா தம் ஸௌம்யதர்ஶநம் ॥ 33

ஸௌம்ய தர்ஶனா - நல்லெண்ணமுடைய அவள்
பூர்வம் - முதலில்
ஆஸனம் - ஆசனத்தை
உபநீய - அளித்து,
பாத்யேந - காலலம்ப ஜலங்கொடுத்து
அபிநிமந்த்ர்ய ச - உபசரித்து,
ததா - அப்பொழுது
தம் - அவனை
ஸித்தம் இதி ஏவ - ஸித்தனெனவே கொண்டு
அப்ரவீத் - பேசலுற்றாள்.

द्विजातिवेषेण समीक्ष्य मैथिली समागतं पात्रकुसुम्भधारिणम् ।
अशक्यमुद्द्वेष्टुमपायदर्शनं न्यमन्त्रयद्ब्राह्मणवत्तदाऽङ्गना ॥

த்விஜாதிவேஷேண ஸமீக்ஷ்ய மைதிலீ
ஸமாகதம் பாத்ரகுஸும்பதாரிணம் ।
அஶக்யமுத்த்வேஷ்டுமுபாயதர்ஶநம்
ந்யமந்த்ரயத் ப்ராம்ஹணவத் ததாங்கநா ॥ 34

அங்கநா - பெண்ணாகிய
மைதிலீ - சீதாதேவி,
உபாயதர்ஶனம் - கெட்ட எண்ணமுடையவனாய்,
உத்த்வேஷ்டும் - உள்ளபடி அறிவதற்கு
அஶக்யம் - முடியாதவனாய்,
த்விஜாதி வேஷேண - பிராமண வேஷத்தோடு
பாத்ர குஸும்ப தாரிணம் - கமண்டலுவையும் காஷாய வஸ்திரத்தையும் உடையவனாய்,
ஸமாகதம் - வந்திருக்குமவனை
ஸமீக்ஷ்ய - பார்த்து,
ததா - அப்பொழுது



ப்ராஹ்மணவத் - பிராமணனை எப்படியோ அப்படியே
ந்யமந்த்ரயத் - பின்வருமாறு வேண்டிக்கொண்டாள்.

इयं बृसी ब्राह्मण काममास्यतामिदं च पाद्यं प्रतिगृह्यतामिति ।
इदं च सिद्धं वनजातमुत्तमं त्वदर्थमव्यग्रमिहोपभुज्यताम् ॥

இயம் ப்ருஸீ ப்ராஹ்மண காம மாஸ்யதாம்
இதம் ச பாத்யம் ப்ரதிக்ருஹ்யதாமிதி ।
இதம் ச ஸித்தம் வனஜாத முத்தமம்
த்வதர்த மவ்யக்ரமிஹோபபுஜ்யதாம் ॥ 35

ப்ராஹ்மண - 'அந்தணரே!
ப்ருஸீ இயம் - ஆசனம் இது.
காமம் - திருவுளப்படியே
ஆஸ்யதாம் - உட்காரப்படட்டும்.
பாத்யம் - பாத்யம்
இதம் ச - இது.
இதி ப்ரதிக்ருஹ்யதாம் - இது எடுத்துக் கொள்ளப்படட்டும்.
த்வதர்தம் - தங்களுக்காகவே
உத்தமம் - சிறந்த
வனஜாதம் - பழவகை
ஸித்தம் - சித்தமாய்
இதம் ச - இதோ இருக்கிறது.
இஹ - இப்பொழுது
அவ்யக்ரம் - சௌகரியப்படி
உபபுஜ்யதாம் - அருந்தப்படட்டும்.'

निमन्त्र्यमाणः प्रतिपूर्णभाषिणीं नरेन्द्रपत्नीं प्रसमीक्ष्य मैथिलीम् ।
प्रसह्य तस्या हरणे धृतं मनः समार्पयत्स्वात्मवधाय रावणः ॥

நிமந்த்ர்யமாண: ப்ரதி பூர்ண பாஷிணீம்
நரேந்த்ரபத்நீம் ப்ரஸமீக்ஷ்ய மைதிலீம் ।
ப்ரஸஹ்ய தஸ்யா ஹரணே த்ருதம் மன:
ஸமார்பயத் ஸ்வாத்மவதாய ராவண: ॥ 36

நிமந்த்ர்யமாண: - பிரார்த்திக்கப்படும்
ராவண: - ராவணன்
ப்ரதி பூர்ண பாஷிணீம் - மனத்திருப்தி கொண்டு பேசுகிறவளாய்
நரேந்த்ர பத்நீம் - புருஷோத்தமனது மனைவியாகிய
மைதிலீம் - சீதையை
ப்ரஸமீக்ஷ்ய - கவனித்து,
தஸ்யா: - அவளை
ப்ரஸஹ்ய - பலாத்கரித்து

ஹரணே - திருடிக்கொண்டு போவதில்
த்ருதம் - உறுதிகொண்ட
மன: - மனதை
ஸ்வாத்ம வதாய - தனது நாசத்தின் பொருட்டு
ஸமார்பயத் - முற்றிலும் செலுத்தி விட்டான்.

ततः सुवेषं मृगयागतं पतिं प्रतीक्षमाणा सहलक्ष्मणं तदा ।
निरीक्षमाणा हरितं ददर्श तन्महद्वनं नैव तु रामलक्ष्मणौ ॥

தத: ஸுவேஷம் ம்ருகயாகதம் பதிம்
ப்ரதீக்ஷமாணா ஸஹலக்ஷ்மணம் ததா ।
விவீக்ஷமாணா ஹரிதம் ததர்ஶ தத்
மஹத்வனம் நைவ து ராமலக்ஷ்மணௌ ॥ 37

ததா - அப்பொழுது
ம்ருகயாகதம் - வேட்டைக்குச் சென்றிருந்த
ஸுவேஷம் - அழகிய
பதிம் - கணவரை
ஸஹ லக்ஷ்மணம் - லக்ஷ்மணரோடுகூட
தத: - அவ்விடத்தில்
ப்ரதீக்ஷமாணா - எதிர்பார்க்கிறவளாக
தத் ஹரிதம் - அந்த பசுமையான
மஹத்வனம் - பெருங்காட்டை
விவீக்ஷமாணா - உற்றுப் பார்ப்பவளாயவள்
ராம லக்ஷ்மணௌ து - ராமலக்ஷ்மணர்களையோ
ந ஏவ ததர்ஶ - எங்கும் காணவில்லை.

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே ராவணபிக்ஷுஸத்காரோ நாம ஷட்சத்வாரிம்ஶ: ஸர்க்க: ॥*



ஸப்த சத்வாரிம்ஶ: ஸர்க: - 47

रावणेन तु वैदेही तथा पृष्टा जिहीर्षता ।
परिव्राजकलिङ्गेन शशंसात्मानमङ्गना ॥

ராவணேன து வைதேஹீ ததா ப்ருஷ்டா ஜிஹீர்ஷதா ।
பரிவ்ராஜகலிங்கேந ஶஶம்ஸாத்மானமங்கநா ॥ 1

பரிவ்ராஜ கலிங்கேந - சந்நியாசி வேஷம் பூண்டு
ஜிஹீர்ஷதா - திருடிச்செல்ல உத்தேசங்கொண்ட
ராவணேன - ராவணனால்
ததா - மேற்கண்டவாறு
ப்ருஷ்டா - வினாவப்பட்ட
அங்கநா - ஸ்திரீயாகிய
வைதேஹீ - வைதேகியார்
ஆத்மானம் து - தனக்குள்ளேயே
ஶஶம்ஸ - ஆலோசித்தாள்.

ब्राह्मणश्चातिथिश्चायमनुक्तो हि शपेत माम् ।
इति ध्यात्वा मुहूर्तं तु सीता वचनमब्रवीत् ॥

ப்ராஹ்மணஶ்ச அதிதிஶ்சாயமநுக்தோ ஹி ஶபேத மாம் ।
இதி த்யாத்வா முஹூர்தம் து ஸீதா வசனமப்ரவீத் ॥ 2

ஸீதா - சீதாதேவி,
அயம் - 'இவர்
அதிதி: - அதிதி.
ச - மேலும்
ப்ராஹ்மண: ச - அந்தணர்.
அநுக்த: ஹி - பதில் சொல்லப்படாதவராகில்
மாம் ஶபேத - என்னை சபிப்பார்'
இதி - என்று
முஹூர்தம் - கொஞ்சநேரம்
த்யாத்வா து - ஆலோசனை செய்துவிட்டு,
வசனம் - பின்வரும் சொல்லை
அப்ரவீத் - அருளிச் செய்தனள்.

दुहिता जनकस्याहं मैथिलस्य महात्मनः ।
सीता नाम्नाऽस्मि भद्रं ते रामभार्या द्विजोत्तम ॥

துஹிதா ஜனகஸ்யாஹம் மைதிலஸ்ய மஹாத்மன: ।
ஸீதா நாம்நாऽஸ்மி பத்ரம் தே ராமபார்யா த்விஜோத்தம ॥ 3

த்விஜோத்தம - பிராமணோத்தமரே!
அஹம் - நான்
மைதிலஸ்ய - மிதிலைக்கரசனாகிய

மஹாத்மன: - மகாத்மாவான
ஜனகஸ்ய - ஜனகரின்
துஹிதா - பெண்.
ராம பார்யா - ராமரின் மனையாள்.
ஸீதா நாம்நா அஸ்மி - சீதை என்பது என் பெயர்;
தே பத்ரம் - தங்களிடமிருந்து க்ஷேமமுண்டாகட்டும்.

उषित्वा द्वादश समा इक्ष्वाकूणां निवेशने ।
भुञ्जाना मानुषान् भोगान् सर्वकामसमृद्धिनी ॥

உஷித்வா த்வாதஶ ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேஶநே ।
புஞ்ஜாநா மாநுஷான் போகான் ஸர்வகாம ஸம்ருத்தினீ ॥ 4

இக்ஷ்வாகூணாம் - இக்ஷ்வாகுவம்சத்தவர்களுடைய
நிவேஶநே - நகரில்
மாநுஷான் - சிறந்த
போகான் - போகங்களை
புஞ்ஜாநா - அனுபவித்துக்கொண்டு
ஸர்வ காம ஸம்ருத்தினீ - எல்லாமனோரதங்களும்நிறைவேறப் பெற்றவளாய்
த்வாதஶ - பன்னிரண்டு
ஸமா: - வருஷங்கள்
உஷித்வா - வசித்தேன்.

ततस्त्रयोदशे वर्षे राजामन्त्रयत प्रभुः ।
अभिषेचयितुं रामं समेतो राजमन्त्रिभिः ॥

ததஸ்த்ரயோதஶே வர்ஷே ராஜாமந்த்ரயத ப்ரபு: ।
அபிஷேசயிதும் ராமம் ஸமேதோ ராஜமந்த்ரிபி: ॥ 5

தத: - அதன்மேல்
த்ரயோதஶே - பதின்மூன்றாவது
வர்ஷே - வருஷத்தில்
ப்ரபு: - பிரபுவான
ராஜா - சக்கிரவர்த்தியார்
ராஜமந்த்ரிபி: - ராஜமந்திரிகளோடு
ஸமேத: - கூடினவராய்
ராமம் - ஸ்ரீராமருக்கு
அபிஷேசயிதும் - யுவராஜ பட்டாபிஷேகம் செய்துவைக்க
அமந்த்ரயத - கருதினார்.

तस्मिन् संभ्रियमाणे तु राघवस्याभिषेचने ।
कैकेयी नाम भर्तारमार्या सा याचते वरम् ॥

தஸ்மின் ஸம்ப்ரியமாணே து ராகவஸ்யாபிஷேசனே ।
கைகேயீ நாம பர்தாரமார்யா ஸா யாசதே வரம் ॥ 6



ராகவஸ்ய - ஸ்ரீராமருடைய
தஸ்மின் - அந்த
அபிஷேசனே - பட்டாபிஷேகம்
ஸம்ப்ரியமாணே து - ஆரம்பிக்கப்படுகையில்
மம ஆர்யா - எனது மாமியாகிய
கைகேயீ நாம - கைகேயி என்பவள்
பர்தாரம் - தனது கணவரிடம்
வரம் - ஏற்கனவே கொடுக்கப்பட்டிருந்த வரத்தை
யாசதே - யாசித்தாள்.

प्रतिगृह्य तु कैकेयी श्वशुरं सुकृतेन मे ।
मम प्रव्राजनं भर्तुर्भरतस्याभिषेचनम् ॥
द्वावयाचत भर्तारं सत्यसन्धं नृपोत्तमम् ॥

ப்ரதிக்ருஹ்ய து கைகேயீ ஶ்வஶுரம் ஸுக்ருதேந மே ।
மம ப்ரவ்ராஜனம் பர்துர் பரதஸ்யாபிஷேசனம் ।
த்வாவயாசத பர்தாரம் ஸத்யஸந்தம் ந்ருபோத்தமம் ॥ 7

கைகேயீ - 'கைகேயி'தேவியார்
மே ஶ்வஶுரம் - எனது மாமனாரை
ஸுக்ருதேந - தர்மபாசத்தால்
ப்ரதிக்ருஹ்ய - பலாத்கரித்து,
மம பர்து: - எனது கணவனாருக்கு
ப்ரவ்ராஜனம் - காடேறலையும்,
பரதஸ்ய - பரதனுக்கு
அபிஷேசனம் - அபிஷேகத்தையும்,
த்வௌ து - ஆகிய இவ்விரண்டையும்
ஸத்ய ஸந்தம் - சத்தியசந்தரான
ந்ருபோத்தமம் - சக்கிரவர்த்தியாகிய
பர்தாரம் - தன் கணவரிடம்
அயாசத - பின்வருமாறு கேட்டனள்.

नाद्य भोक्ष्ये न च स्वप्स्ये न च पास्ये कथंचन ।
एष मे जीवितस्यान्तो रामो यद्यभिषिच्यते ॥

நாத்ய போக்ஷ்யே ந ச ஸ்வப்ஸ்யே ந ச பாஸ்யே கதஞ்சன ।
ஏஷ மே ஜீவிதஸ்யாந்தோ ராமோ யத்யபிஷிச்யதே ॥ 8

ராம: - 'ராமன்
அபிஷிச்யதே யதி - அபிஷேகஞ் செய்யப்படுவானானால்
அத்ய - இதுமுதல்
ந போக்ஷ்யே - உண்ணேன்.
ந ஸ்வப்ஸ்யே ச - உறங்கவும் மாட்டேன்;
ந பாஸ்யே ச - தீர்த்த பானமும் செய்யமாட்டேன்.
ஏஷ: - இது

மே - எனக்கு
ஜீவிதஸ்ய - உயிருக்கு
கதஞ்சன - எப்படியும்
அந்த: - முடிவாகும்.

इति ब्रुवाणां कैकेयीं श्वशुरो मे स मानदः ।
अयाचतार्थैरन्वर्थैर्न च याच्ञां चकार सा ॥

இதி ப்ருவாணாம் கைகேயீம் ஶ்வஶுரோ மே ஸ மானத: ।
அயாசதார்தைரந்வர்தைர் ந ச யாச்ஞாம் சகார ஸா ॥ 9

ஸ: - 'அந்த
மானத: - யாவரிடமும் மரியாதையாய் நடக்கும்
மே ஶ்வஶுர: - எனது மாமனார்
இதி - மேற்கண்டவாறு
ப்ருவாணாம் - பேசும்
கைகேயீம் - கைகேயியிடம்
அந்வர்தை: - தர்மத்தோடியைந்த
அர்தை: - காரணங்களைக் கொண்டு
அயாசத - வேண்டிக்கொண்டார்.
ஸா ச - அவளோ
யாச்ஞாம் - வேண்டுகோளுக்கு
ந சகார - உடன்படவில்லை.

मम भर्ता महातेजा वयसा पञ्चविंशकः ।
अष्टादश हि वर्षाणि मम जन्मनि गण्यते ॥

மம பர்தா மஹாதேஜா வயஸா பஞ்சவிம்ஶக: ।
அஷ்டாதஶ ஹி வர்ஷாணி மம ஜன்மனி கண்யதே ॥ 10

மம - 'எனது
மஹாதேஜா: - அளவுகடந்த ஆற்றலுடைய
பர்தா - பர்த்தா
வயஸா - அப்பொழுது
பஞ்சவிம்ஶக: - இருபத்தைந்து வயதுடையவர்.
மம ஜன்மனி - நான் பிறந்து
அஷ்டாதஶ - பதினெட்டு
வர்ஷாணி ஹி - வருஷங்களென்று
கண்யதே - கணக்கிடப்படுகிறது.

रामेति प्रथितो लोके गुणवान् सत्यवाञ्शुचिः ।
विशालाक्षो महाबाहुः सर्वभूतहिते रतः ॥

ராமேதி ப்ரதிதோ லோகே குணவான் ஸத்யவான் ஶுசி: ।
விஶாலாக்ஷோ மஹாபாஹு: ஸர்வபூதஹிதே ரத: ॥ 11

லோகே - 'உலகில்
ராமேதி - ராம என்கிற பெயராலேயே



ப்ரதித: - யாவராலும் அறியப்பட்டவர்.
குணவான் - திருக்கல்யாணகுணங்களுற்றவர்.
ஸத்யவான் - சொன்ன சொல் தவறாதவர்.
ஶுசி: - பரிசுத்த மூர்த்தி.
விஶாலாக்ஷ: - பரந்த கண்களுற்றவர்.
மஹாபாஹு: - மகாபாகு.
ஸர்வபூதஹிதே - எல்லாப் பிராணிகளின் நன்மையில்
ரத: - ஆஸக்தியுள்ளவர்.

कामार्तस्तु महाबाहुः पिता दशरथः स्वयम् ।
कैकेय्याः प्रियकामार्थं तं रामं नाभ्यषेचयत् ॥

காமார்தஸ்து மஹாபாஹு: பிதா தஶரத: ஸ்வயம் ।
கைகேய்யா: ப்ரியகாமார்தம் தம் ராமம் நாப்யஷேசயத் ॥ 12

மஹாபாஹு: - 'மகாபாகுவாகும்
பிதா - பிதாவாகிய
தஶரத: - தசரதசக்ரவர்த்தியார்
ஸ்வயம் - தானே
காமார்த: ச - காதல் விஷயத்தில் பச்சாதாபப்படுகிறவராக ஆகியும்
கைகேய்யா: - கைகேயிக்கு
ப்ரிய காமார்தம் - இஷ்டமானதைப் பூர்த்தி செய்வதற்காக
தம் ராமம் - அந்த ஸ்ரீராமரை
ந அப்யஷேசயத் - பட்டாபிஷேகஞ் செய்யவில்லை.

अभिषेकाय तु पितुः समीपं राममागतम् ।
कैकेयी मम भर्तारमित्युवाच धृतं वचः ॥

அபிஷேகாய து பிது: ஸமீபம் ராமமாகதம் ।
கைகேயீ மம பர்தார மித்யுவாச த்ருதம் வச: ॥ 13

பிது: - 'தந்தையினது
ஸமீபம் - ஸன்னிதிக்கு
அபிஷேகாய து - அபிஷேகத்திற்காகவே
ஆகதம் - வந்த
மம பர்தாரம் - எனது கணவராகிய
ராமம் - ஸ்ரீராமரைப் பார்த்து
கைகேயீ - கைகேயிதேவியார்
த்ருதம் - தீர்மானிக்கப்பட்ட
வச: - நியமனத்தை
இதி - பின்வருமாறு
உவாச - கூறினாள்.

तव पित्रा समाज्ञप्तं ममेदं शृणु राघव ।
भरताय प्रदातव्यमिदं राज्यमकण्टकम् ॥

தவ பித்ரா ஸமாஜ்ஞப்தம் மமேதம் ஶ்ருணு ராகவ ।
பரதாய ப்ரதாதவ்யமிதம் ராஜ்யமகண்டகம் ॥ 14

தவ - 'உனது
பித்ரா - தந்தையால்
ஸமாஜ்ஞப்தம் - ஆக்ஞாபிக்கப்பட்டதாகிய
இதம் - இதை
மம - சொல்லுமெனக்கு
ஶ்ருணு - செவிகொடு.
ராகவ - ராம!
இதம் ராஜ்யம் - இந்த ராஜ்யமானது
அகண்டகம் - இடையூறற்றதாய்
பரதாய - பரதனுக்கு
ப்ரதாதவ்யம் - கொடுக்கப்பட வேண்டியது.

त्वया हि खलु वस्तव्यं नव वर्षाणि पञ्च च ।
वने प्रव्रज काकुत्स्थ पितरं मोचयानृतात् ॥

த்வயாஹி கலு வஸ்தவ்யம் நவ வர்ஷாணி பஞ்ச ச ।
வனே ப்ரவ்ரஜ காகுத்ஸ்த பிதரம் மோசயாந்ருதாத் ॥ 15

த்வயா - 'உன்னால்
நவ பஞ்ச - பதினான்கு
வர்ஷாணி ச - வருஷங்களும்
வனே - காட்டில்
வஸ்தவ்யம் கலு - வசிக்கப்பட வேண்டியதே.
காகுத்ஸ்த - ராம!
து - இப்பொழுது
ப்ரவ்ரஜ - காடேறு.
பிதரம் - தந்தையை
அந்ருதாத் - பொய்யினின்று
மோசய - விடுவிப்பாயாக.'

तथेत्युक्त्वा च तां रामः कैकेयीमकुतोभयः ।
चकार तद्वचस्तस्या मम भर्ता दृढव्रतः ॥

ததேத்யுக்த்வா ச தாம் ராம: கைகேயீ மகுதோபய: ।
சகார தத்வசஸ்தஸ்யா மம பர்தா த்ருடவ்ரத: ॥ 16

அகுதோபய: - 'எதிலும் மனம் சலியாத
ராம: - ஸ்ரீராமராகிய
மம - எனது
பர்தா ச - பர்த்தாவோ
த்ருட வ்ரத: - தர்மானுஷ்டானத்தில் சலியாப் பற்றுடையவராகி



தாம் - அந்த
கைகேயீம் - கைகேயியை பார்த்து
ததா - 'திருவுளப்படியே செய்வேன்'
இதி உக்த்வா - என்று சொல்லி,
தஸ்யா: - அவளது
தத் வச: - அந்த நியமனத்தை
சகார - சிரமேற்கொண்டார்.

दद्यान्न प्रतिगृह्णीयात् सत्यं ब्रूयान्न चानृतम् ।
एतद्ब्राह्मण रामस्य व्रतं ध्रुवमनुत्तमम् ॥

தத்யாந் ந ப்ரதிக்ருஹ்ணீயாத் ஸத்யம் ப்ரூயாந் ந சாந்ருதம் ।
ஏதத் ப்ராஹ்மண ராமஸ்ய வ்ரதம் த்ருதமநுத்தமம் ॥ 17

ப்ராஹ்மண - 'அந்தணரே!
தத்யாத் - அளிப்பார்;
ந ப்ரதிக்ருஹ்ணீயாத் - வாங்கார்;
ஸத்யம் - உண்மையை
ப்ரூயாத் - பேசுவார்;
அந்ருதம் - பொய்யை
ச ந - ஒருபொழுதும் பேசார்.
ராமஸ்ய - ஸ்ரீராமருடைய
அநுத்தமம் - ஒப்புயர்வற்ற
த்ருவம் - சாச்வதமான
வ்ரதம் - அனுஷ்டானம் -
ஏதத் - இது.

तस्य भ्राता तु द्वैमात्रो लक्ष्मणो नाम वीर्यवान् ।
रामस्य पुरुषव्याघ्रः सहायः समरेऽरिहा ॥

தஸ்ய ப்ராதா து த்வைமாத்ரோ லக்ஷ்மணோ நாம வீர்யவான் ।
ராமஸ்ய புருஷவ்யாக்ர: ஸஹாய: ஸமரேऽரிஹா ॥ 18

லக்ஷ்மணோ நாம - லக்ஷ்மணரென்பவர்
தஸ்ய - அவரது
த்வைமாத்ர: - இளைய தாயின் குமாரராகிய
ப்ராதா - தம்பி.
ஸமரே - போரில்
அரிஹா - பகைவர்களையொழிக்கும்
வீர்யவான் து - வீர்யசாலி.
ராமஸ்ய - ஸ்ரீராமருக்கு
ஸஹாய: - திருத்தொண்டுபுரியும்
புருஷவ்யாக்ர: - புருஷோத்தமர்.

स भ्राता लक्ष्मणो नाम धर्मचारी दृढव्रतः ।
अन्वगच्छद्धनुष्पाणिः प्रव्रजन्तं मया सह ॥

ஸ ப்ராதா லக்ஷ்மணோ நாம தர்மசாரீ த்ருடவ்ருத: ।
அன்வகச்சத் தநுஷ்பாணி: ப்ரவ்ரஜந்தம் மயா ஸஹ ॥ 19

த்ருட வ்ருத: - 'தர்மானுஷ்டானத்தில் உறுதிகொண்டவரும்
தர்மசாரீ - தர்மானுஷ்டானமுடையவருமான
லக்ஷ்மணோ நாம - லக்ஷ்மணரென்ற
ஸ: ப்ராதா - அந்தத் தம்பி
மயா ஸஹ - என்னோடுகூட
ப்ரவ்ரஜந்தம் - வனத்திற்குப் புறப்படுமவரை
தநுஷ்பாணி: - வில்லேந்தியவனாய்
அன்வ கச்சத் - பின்பற்றி வந்தார்.

जटी तापसरूपेण मया सह सहानुजः ।
प्रविष्टो दण्डकारण्यं धर्मनित्यो जितेन्द्रियः ॥

ஜடீ தாபஸரூபேண மயா ஸஹ ஸஹாநுஜ: ।
ப்ரவிஷ்டோ தண்டகாரண்யம் தர்மநித்யோ த்ருடவ்ரத: ॥ 20

தர்மநித்ய: - 'தர்மநோக்கமுடையவரும்
த்ருடவ்ரத: - சலியா தர்மானுஷ்டானமுடையவருமான அவர்
தாபஸரூபேண் - தவசியுருவத்தோடு
ஜடீ - சடை புனைந்தவராய்
ஸஹாநுஜ: - தம்பியுடன் கூடியவராய்
மயா ஸஹ - என்னோடுகூட
தண்டகாரண்யம் - தண்டகாரண்யத்திற்குள்
ப்ரவிஷ்ட: - வந்தார்.

ते वयं प्रच्युता राज्यात् कैकेय्यास्तु कृते त्रयः ।
विचराम द्विजश्रेष्ठ वनं गम्भीरमोजसा ॥

தே வயம் ப்ரச்யுதா ராஜ்யாத் கைகேய்யாஸ்து க்ருதே த்ரய: ।
விசராம த்விஜஶ்ரேஷ்ட வனம் கம்பீரமோஜஸா ॥ 21

த்விஜ ஶ்ரேஷ்ட - 'பிராமணோத்தமரே!
தே - அந்த
வயம் - நாங்கள்
த்ரய: - மூவர்களும்
கைகேய்யாஸ்து க்ருதே - கைகேயியின் பொருட்டே
ராஜ்யாத் - ராஜ்யத்திலிருந்து
ப்ரச்யுதா: - வெளிப்பட்டவர்களாய்
கம்பீரம் வனம் - பயங்கரமான காட்டில்



ஓஜஸா - தேஜஸால்
விசராம் - வாழ்ந்து வருகின்றோம்.'

समाश्वस मुहूर्तं तु शक्यं वस्तुमिह त्वया ।
आगमिष्यति मे भर्ता वन्यमादाय पुष्कलम् ॥

ஸமாஶ்வஸ முஹூர்தந்து ஶக்யம் வஸ்துமிஹ த்வயா ।
ஆகமிஷ்யதி மே பர்தா வந்யமாதாய புஷ்கலம் ॥ 22

த்வயா - 'தங்களால்
இஹ - இவ்விடத்தில்
முஹூர்தம் - சற்று
வஸ்தும் - தாமதிக்க
ஶக்யம் து - இஷ்டமிருக்கிறதாகில்
ஸமாஶ்வஸ - இளைப்பாறுவீராக.
மே பர்தா - எனது கணவர்
புஷ்கலம் வன்யம் - சிறந்த பலாதிகளை
ஆதாய - எடுத்துக்கொண்டு,
ஆகமிஷ்யதி - இதோ வந்துவிடுவார்.

स त्वं नाम च गोत्रं च कुलं चाचक्ष्व तत्त्वतः ॥

ஸ த்வம் நாம ச கோத்ரம் ச குலம் சாசக்ஷ்வ தத்வத: ।
ஸ: த்வம் - 'அந்த தாங்கள்
நாம: ச - பெயரையும்
கோத்ரம் ச - கோத்திரத்தையும்
குலம் ச - குலத்தையும்,
தத்வத: - சரியாய்
ஆசக்ஷ்வ - தெரிவிக்க வேண்டும்.

एकश्च दण्डकारण्ये किमर्थं चरसि द्विज ॥

ஏகஶ்ச தண்டகாரண்யே கிமர்தம் சரஸி த்விஜ ॥ 24

த்விஜ - 'அந்தணரே!
தண்டகாரண்யே - தண்டகாரண்யத்தில்
ஏக: ச - சீடர்களின்றி
கிமர்தம் - என்ன காரியமாய்
சரஸி - வந்திருக்கிறீர்?

एवं ब्रुवन्त्यां सीतायां रामपत्न्यां महाबलः ।
प्रत्युवाचोत्तरं तीव्रं रावणो राक्षसाधिपः ॥

ஏவம் ப்ருவந்த்யாம் ஸீதாயாம் ராமபத்ந்யாம் மஹாபல: ।
ப்ரத்யுவாசோத்தரம் தீவ்ரம் ராவணோ ராக்ஷஸாதிப: ॥ 25

ராமபத்ந்யாம் - ராமருடைய மனைவியாகிய
ஸீதாயாம். - சீதை
ஏவம் - மேற்கண்டவாறு
ப்ருவந்த்யாம் - மொழிகையில்
மஹாபல: - மகா பலவானும்
ராக்ஷஸாதிப: - அரக்கர் வேந்தனுமாகிய
ராவண: - ராவணன்
தீவ்ரம் - கர்ணகடோரமாயிருக்கிற
உத்தரம் - பின்வரும் பதில் வார்த்தையை
ப்ரத்யுவாச - அவளைப் பார்த்துச் சொன்னான்.

**येन वित्रासिता लोकाः सदेवासुरमानुषाः ।**
**अहं स रावणो नाम सीते रक्षोगणेश्वरः ॥**

**யேந வித்ராஸிதா லோகாஸ் ஸதேவாஸுர மாநுஷா: ।**
**அஹம் ஸ ராவணோ நாம ஸீதே ரக்ஷோகணேஶ்வர: ॥** 26

ஸீதே - ஸீதே!
யேந - எவனொருவனால்
ஸ தேவாஸுரபந்நகா: - தேவர்கள், அசுரர்கள், பன்னகர்களுமுள்பட்ட
லோகா: - மூவுலகங்களும்
வித்ராஸிதா: - அச்சமுறச் செய்யப்பட்டனவோ,
ஸ: அஹம் - அந்த நான்
ராவணோ நாம - ராவணனென்ற
ரக்ஷோகணேஶ்வர: - ராக்ஷஸகண மன்னன்.

**त्वां तु काञ्चनवर्णाभां दृष्ट्वा कौशेयवासिनीम् ।**
**रतिं स्वकेषु दारेषु नाधिगच्छाम्यनिन्दिते ॥**

**த்வாம் து காஞ்சனவர்ணாபாம் த்ருஷ்ட்வா கௌஶேயவாஸிநீம் ।**
**ரதிம் ஸ்வகேஷு தாரேஷு நாதிகச்சாம்யநிந்திதே ॥** 27

அநிந்திதே - சுந்தரீ!
காஞ்சன வர்ணாபாம் - பொன்னிறமுற்றவளாயும்
கௌஶேய வாஸிநீம் - பட்டாடையுடுத்தியவளாயும்
த்வாம் - உன்னை
த்ருஷ்ட்வா து - கண்டதுமே,
ஸ்வகேஷு - எனது
தாரேஷு - மனைவிகளிடத்தில்
ரதிம் - ஆசையை
ந அதிகச்சாமி - அடையவில்லை.

**बह्वीनामुत्तमस्त्रीणामाहृतानामितस्ततः ।**
**सर्वासामेव भद्रं ते ममाग्रमहिषी भव ॥**



**பஹ்வீநாமுத்தமஸ்த்ரீணாமாஹ்ருதாநாமிதஸ்தத: ।**
**ஸர்வாஸாமேவ பத்ரம் தே மமாக்ரமஹிஷீ பவ ॥** 28

இதஸ்தத: - ஆங்காங்கிருந்து
ஆஹ்ருதாநாம் - கொண்டுவரப்பட்டிருக்கின்ற
பஹ்வீநாம் - பல
உத்தம ஸ்த்ரீணாம் - ஸ்திரீரத்னங்கள்
ஸர்வாஸாம் - எல்லோருக்கும்,
மம ஏவ - எனக்குமே
அக்ரமஹிஷீ - பட்டமகிஷியாய்
பவ - ஆகுவாயாக.
தே பத்ரம் - உனக்கு க்ஷேமமுண்டாகுக.

**लङ्का नाम समुद्रस्य मध्ये मम महापुरी ।**
**सागरेण परिक्षिप्ता निविष्टा गिरिमूर्धनि ॥**

**லங்கா நாம ஸமுத்ரஸ்ய மத்யே மம மஹாபுரீ ।**
**ஸாகரேண பரிக்ஷிப்தா நிவிஷ்டா கிரிமூர்தநி ॥** 29

மம - எனது
மஹாபுரீ - ராஜதானி
ஸமுத்ரஸ்ய - ஸமுத்திரத்தின்
மத்யே - இடையிலிருக்கும்
லங்கா நாம - லங்கையென்பது.
ஸாகரேண - சமுத்திரத்தால்
பரிக்ஷிப்தா - நாற்புறமும் சூழப்பெற்றது.
கிரிமூர்தநி - மலையினுச்சியில்
நிவிஷ்டா - அமையப்பெற்றது.

**तत्र सीते मया सार्धं वनेषु विहरिष्यसि ।**
**न चास्य वनवासस्य स्पृहयिष्यसि भामिनि ॥**

**தத்ர ஸீதே மயா ஸார்தம் வநேஷு விஹரிஷ்யஸி ।**
**ந சாஸ்ய வனவாஸஸ்ய ஸ்ப்ருஹயிஷ்யஸி பாமினி ॥** 30

ஸீதே - ஸீதே;
தத்ர - அவ்விடத்தில்
வநேஷு - சோலைகளில்
மயா ஸார்தம் - என்னோடுகூட
விஹரிஷ்யஸி - பொழுதுபோக்குவாய்;
பாமினி - சுந்தரீ!
அஸ்ய - இந்த
அரண்ய வாஸஸ்ய - அரண்ய வாஸத்தை
ந ஸ்ப்ருஹயிஷ்யஸி ச - விரும்பவே மாட்டாய்.

पञ्च दासी सहस्राणि सर्वाभरणभूषिताः ।
सीते परिचरिष्यन्ति भार्या भवसि मे यदि ॥

பஞ்ச தாஸீ ஸஹஸ்ராணி ஸர்வாபரண பூஷிதா: ।
ஸீதே பரிசரிஷ்யந்தி பார்யா பவஸி மே யதி ॥ 31

ஸீதே - 'ஸீதே!
மே பார்யா - எனக்கு மனைவியாக
பவஸி யதி - நீ ஆகிவிட்டால்,
ஸர்வாபரண பூஷிதா:- எல்லா அவயவங்களிலும் ஆபரணங்கள் அணியப்பெற்றவர்களாய்
பஞ்ச தாஸீ ஸஹஸ்ராணி - ஐயாயிரம் பணிப்பெண்கள்
பரிசரிஷ்யந்தி - பணிவிடை செய்வார்கள்.'

रावणेनैवमुक्ता तु कुपिता जनकात्मजा ।
प्रत्युवाचानवद्याङ्गी तमनादृत्य राक्षसम् ॥

ராவணேநைவ முக்தா து குபிதா ஜனகாத்மஜா ।
ப்ரத்யுவாசானவத்யாங்கீ தமநாத்ருத்ய ராக்ஷஸம் ॥ 32

ராவணேந - ராவணனால்
ஏவம் உக்தா - இப்படி சொல்லப்பட்ட
அனவத்யாங்கீ - கல்மஷமற்ற மனத்தினளாய்
ஜனகாத்மஜா து - ஜனகர் திருமகளோ
குபிதா - சினங்கொண்டவளாய்
தம் ராக்ஷஸம் - அந்த அரக்கனை
அநாத்ருத்ய - திரஸ்கரித்து,
ப்ரத்யுவாச - பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினாள்.

महागिरिमिवाकम्प्यं महेन्द्रसदृशं पतिम् ।
महोदधिमिवाक्षोभ्यमहं राममनुव्रता ॥

மஹாகிரிமிவாகம்ப்யம் மஹேந்த்ர ஸத்ருஶம் பதிம் ।
மஹோததி மிவாக்ஷோப்யமஹம் ராமமநுவ்ரதா ॥ 33

மஹாகிரிம் இவ - 'மாமலையைப் போலவே
அகம்ப்யம் - அசைக்க வொண்ணாதவரும்,
மஹோததிம் இவ - ஆழ்ந்த கடலைப் போலவே
அக்ஷோப்யம் - கலக்க வொண்ணாதவரும்,
மஹேந்த்ர ஸத்ருஶம்- இந்திரனை நிகர்த்தவருமான
ராமம் - ஸ்ரீராமராகிய
பதிம் - கணவரை
அஹம் - நான்
அநுவ்ரதா - ஸர்வமுமாய்க் கொண்டவள்.



सर्वलक्षणसंपन्नं न्यग्रोधपरिमण्डलम् ।
सत्यसन्धं महाभागमहं राममनुव्रता ॥

ஸர்வலக்ஷண ஸம்பந்நம் ந்யக்ரோத பரிமண்டலம் ।
ஸத்யஸந்தம் மஹாபாகமஹம் ராமமநுவ்ரதா ॥ 34

ஸர்வ லக்ஷண ஸம்பந்நம் - 'சகல கல்யாண குணங்கள் நிறைந்தவரும்,
ந்யக்ரோத பரிமண்டலம் - ஆலமரம்போல் அண்டியவர்களை ஆதரிப்பவரும்,
ஸத்ய ஸந்தம் - சொன்ன சொல் தவறாதவரும்,
மஹாபாகம் - பரிசுத்தமூர்த்தியுமாகிய
ராமம் - ஸ்ரீராமரை
அஹம் - நான்
அநுவ்ரதா - ஸர்வமுமாய்க் கொண்டவள்.

महाबाहुं महोरस्कं सिंहविक्रान्तगामिनम् ।
नृसिंहं सिंहसङ्काशमहं राममनुव्रता ॥

மஹாபாஹும் மஹோரஸ்கம் ஸிம்ஹவிக்ராந்தகாமினம் ।
ந்ருஸிம்ஹம் ஸிம்ஹஸங்காஶம் அஹம் ராமமநுவ்ரதா ॥ 35

மஹாபாஹும் - 'நீண்ட கைகளையுடையவரும்,
மஹோரஸ்கம் - அகன்ற மார்பையுடையவரும்,
ஸிம்ஹவிக்ராந்த காமினம் - சிங்கத்தின் நடைபோன்ற நடையை உடையவரும்,
ஸிம்ஹ ஸங்காஶம் - சிங்கத்தை நிகர்த்தவரும்,
ந்ருஸிம்ஹம் - புருஷோத்தமருமாகிய
ராமம் - ஸ்ரீராமரை
அஹம் - நான்
அநுவ்ரதா - ஸர்வமுமாய்க் கொண்டவள்.

पूर्णचन्द्राननं रामं राजवत्सं जितेन्द्रियम् ।
पृथुकीर्तिं महात्मानमहं राममनुव्रता ॥

பூர்ணசந்த்ராநநம் ராமம் ராஜவத்ஸம் ஜிதேந்த்ரியம் ।
ப்ருதுகீர்திம் மஹாத்மானமஹம் ராமமநுவ்ரதா ॥ 36

பூர்ண சந்த்ராநநம் - 'முழுமதிபோன்ற திருமுகமண்டலம் பெற்றவரும்,
ராமம் - அபிராமரும்,
ராஜ வத்ஸம் - அரசர்களால் குழந்தைகளைப்போல் கொண்டாடப் பெற்றவரும்,
ஜிதேந்த்ரியம் - ஐம்புலன்களையும் அடக்கியவரும்,
ப்ருது கீர்திம் - எங்கும் பரவிய புகழ் பெற்றவரும்,
மஹாத்மானம் - மகாத்மாவுமாகிய

ராமம் - ஸ்ரீராமரை
அஹம் - நான்
அநுவ்ரதா - ஸர்வமுமாய்க் கொண்டவள்.

त्वं पुनर्जम्बुकः सिंहीं मामिच्छसि सुदुर्लभाम् ।
नाहं शक्या त्वया स्प्रष्टुमादित्यस्य प्रभा यथा ।।

த்வம் புனர் ஜம்புக: ஸிம்ஹீம் மாமிச்சஸி ஸுதுர்லபாம் ।
நாஹம் ஶக்யா த்வயா ஸ்ப்ரஷ்டுமாதித்யஸ்ய ப்ரபா யதா ॥ 37

ஜம்புக: த்வம் புன: - 'நரியாகிய நீயோ
ஸுதுர்லபாம் - அணுக முடியாத
ஸிம்ஹீம் மாம் - பெண் சிங்கமாகிய என்னை
இஹ - இப்பொழுது
இச்சஸி - விரும்புகின்றாய்.
அஹம் - நான்
த்வயா - உன்னால்
ஆதித்யஸ்ய - சூர்யபகவானது
ப்ரபா - தேஜஸ்ஸானது
யதா - எவ்வண்ணமோ அவ்வண்ணமே
ஸ்ப்ரஷ்டும் - அணுகுவதற்கு
ந ஶக்யா - முடிந்தவளன்று.

पादपान् काञ्चनान्नूनं बहून् पश्यसि मन्दभाक् ।
राघवस्य प्रियां भार्यां यस्त्वमिच्छसि रावण ।।

பாதபான் காஞ்சநாந் நூநம் பஹூன் பஶ்யஸி மந்தபாக் ।
ராகவஸ்ய ப்ரியாம் பார்யாம் யஸ்த்வமிச்சஸி ராவண ॥ 38

ராவண - 'ராவணா!
ராகவஸ்ய - ஸ்ரீராமருடைய
ப்ரியாம் - இஷ்டையான
பார்யாம் - மனைவியை
ய: த்வம் - எந்த நீ
இச்சஸி - விரும்புகின்றனையோ அந்த
மந்தபாக் - ஸர்வமூடனே
பஹூன் - எல்லா
பாதபான் - மரங்களை
காஞ்சநாந் - பொன்மயமாக
பஶ்யஸி நூநம் - பிரமிக்கின்றனை போலும்.

क्षुधितस्येव हि सिंहस्य मृगशत्रोस्तरस्विनः ।
आशीविषस्य वदनाद्दंष्ट्रामादातुमिच्छसि ।।



க்ஷுதிதஸ்யேவ ஸிம்ஹஸ்ய ம்ருகஶத்ரோஸ்தரஸ்விந: ।
ஆஶீவிஷஸ்ய வதநாத் தம்ஷ்ட்ரா மாதாது மிச்சஸி ॥ 39

தரஸ்விந: - 'கொழுத்ததும்,
ம்ருக ஶத்ரோ: - மிருகங்களுடைய சத்ருவும்,
க்ஷுதிதஸ்ய - பசியுடனிருக்கிறதுமான
ஸிம்ஹஸ்ய - சிம்மத்தினுடைய
வதநாத் - வாயினின்று
தம்ஷ்ட்ராம் ஆதாதும்-பல்லை பிடுங்குவதற்கு
இச்சஸி - நினைக்கின்றனை;
இவ - இதுபோலவே
ஆஶீவிஷஸ்ய - கொடிய சர்ப்பத்தினுடையவும்.

मन्दरं पर्वतश्रेष्ठं पाणिना हर्तुमिच्छसि ।
कालकूटं विषं पीत्वा स्वस्तिमान् गन्तुमिच्छसि ।।

மந்தரம் பர்வதஶ்ரேஷ்டம் பாணிநா ஹர்துமிச்சஸி ।
காலகூடவிஷம் பீத்வா ஸ்வஸ்திமான் கந்துமிச்சஸி ॥ 40

பர்வதஶ்ரேஷ்டம் - 'மலைகளில் பெரிதாகிய
மந்தரம் - மந்தரமலையை
பாணிப்யாம் - இரு கைகளாலும்
ஹர்தும் - வேரோடு பிடுங்க
இச்சஸி - விரும்புகின்றனை.
காலகூட விஷம்★ - காளகூட விஷத்தை
பீத்வா - குடித்துவிட்டு,
ஸ்வஸ்திமான் - உயிருடனிருப்பவனாக
கந்தும் - செல்வதற்கு
இச்சஸி - நினைக்கின்றனை.

★அமிருதத்திற்காக மந்திரமலையை மத்தாகக்கொண்டு பாற்கடலை கடையும்பொழுது கிடைத்ததும் எந்த தேவர்களாலும் அணுக முடியாதிருந்ததும் சிவபெருமான் ஒருவரால் பருகப்பட்டதுமாகிய காளகூட விஷத்தை

अक्षि सूच्या प्रमृजसि जिह्वया लेढि च क्षुरम् ।
राघवस्य प्रियां भार्यां योऽधिगन्तुं त्वमिच्छसि ।।

அக்ஷி ஸூச்யா ப்ரம்ருஜஸி ஜிஹ்வயா லேடி ச க்ஷுரம் ।
ராகவஸ்ய ப்ரியாம் பார்யாம் யோऽதிகந்தும் த்வமிச்சஸி ॥ 41

அக்ஷி - 'கண்ணை
ஸூச்யா - ஊசியால்
ப்ரம்ருஜஸி - துடைக்கின்றனை.

ஜிஹ்வயா - நாக்கால்
க்ஷுரம் - கத்தியை
லேடி - நக்குகின்றனை.
ச த்வம் - இவ்விதமே நீ
ராகவஸ்ய - ஸ்ரீராமருடைய
ப்ரியாம் - இஷ்டமான
பார்யாம் - மனைவியை
அதிகந்தும் - அணுக
இச்சஸி - நினைக்கின்றனை.

अवसज्य शिलां कण्ठे समुद्रं तर्तुमिच्छसि ।
सूर्याचन्द्रमसौ चोभौ पाणिभ्यां हर्तुमिच्छसि ॥

அவஸஜ்ய ஶிலாம் கண்டே ஸமுத்ரம் தர்துமிச்சஸி ।
ஸூர்யாசந்த்ரமஸௌ சோபௌ பாணிப்யாம் ஹர்துமிச்சஸி ॥ 42

கண்டே - 'கழுத்தில்
ஶிலாம் - பாறையை
அவஸஜ்ய - கட்டிக்கொண்டு,
ஸமுத்ரம் - சமுத்திரத்தை
தர்தும் - கடக்க
இச்சஸி - நினைக்கின்றனை.
ஸூர்யா சந்த்ரமஸௌ- சூரிய சந்திரன் ஆகிய
உபௌ ச - இருவர்களையும்
பாணிப்யாம் - இரு கைகளாலும்
ஹர்தும் - வேரோடு பிடுங்க
இச்சஸி - நினைக்கின்றனை.

यो रामस्य प्रियां भार्यां प्रधर्षयितुमिच्छसि ॥

யோ ராமஸ்ய ப்ரியாம் பார்யாம் ப்ரதர்ஷயிதுமிச்சஸி ॥ 43

ய: - 'அந்த நீ
ராமஸ்ய - ஸ்ரீராமருடைய
ப்ரியாம் - இஷ்டமான
பார்யாம் - பத்னியை
ப்ரதர்ஷயிதும் - கெடுக்க
இச்சஸி - நினைக்கின்றனை.

अग्निं प्रज्वलितं दृष्ट्वा वस्त्रेणाहर्तुमिच्छसि ।
कल्याणवृत्तां रामस्य यो भार्यां हर्तुमिच्छसि ॥

அக்நிம் ப்ரஜ்வலிதம் த்ருஷ்ட்வா வஸ்த்ரேணாஹர்து மிச்சஸி ।
கல்யாண வ்ருத்தாம் ராமஸ்ய யோ பார்யாம் ஹர்துமிச்சஸி ॥ 44



ப்ரஜ்வலிதம் - கொழுந்துவிட்டெரியும்
அக்நிம் - தீயை
த்ருஷ்ட்வா - கண்டு,
வஸ்த்ரேண - வஸ்திரத்தில்
ஆஹர்தும் - எடுத்துச் செல்வதற்கு
இச்சஸி - நினைக்கின்றனை.
ய: - அந்த நீ
ராமஸ்ய - ஸ்ரீராமருடைய
கல்யாண வ்ருத்தம் - மகா பதிவ்ரதையாகிய
பார்யாம் - மனைவியை
ஹர்தும் - அடைய
இச்சஸி - நினைக்கின்றனை.

अयोमुखानां शूलानां अग्रे चरितुमिच्छसि ।
रामस्य सदृशीं भार्यां योऽधिगन्तुं त्वमिच्छसि ॥
दंष्ट्रीविषं महाघोरमङ्गुल्या तुदसे भृशम् ॥

அயோமுகாநாம் ஶூலாநாம் அக்ரே சரிதுமிச்சஸி ।
ராமஸ்ய ஸத்ருஶீம் பார்யாம் யோऽதிகந்தும் த்வம் இச்சஸி ॥
தம் த்ருஷ்டி விஷம் மஹாகோரம் அங்குல்யா துதஸே ப்ருஶம் ॥ 46

அயோமுகாநாம் - 'இரும்புக்கூறுள்ள
ஶூலாநாம் - சூலங்களின்
அக்ரே சரிதும் - நுனியில் நடக்க
இச்சஸி - நினைக்கின்றனை.
மஹாகோரம் - மிகக் கொடிய
தம்ஷ்ட்ரீ விஷம் - சர்ப்பத்தின் எரிக்கும் விஷத்தை,
அங்குல்யா - விரலால்
ப்ருஶம் - பிடிவாதமாய்
துதஸே - கிளருகின்றனை.
ய: த்வம் - அந்த நீ
ராமஸ்ய - ஸ்ரீராமருக்கு
ஸத்ருஶீம் பார்யாம்- ஏற்ற மனைவியை
அதிகந்தும் - அடைய
இச்சஸி - நினைக்கின்றனை.

यदन्तरं सिंहसृगालयोर्वने यदन्तरं स्यन्दिनिकासमुद्रयोः ।
सुराग्र्यसौवीरकयोर्यदन्तरं तदन्तरं वै तव राघवस्य च ॥

யதந்தரம் ஸிம்ஹ ஸ்ருகாலயோர் வநே
யதந்தரம் ஸ்யந்திநிகரஸமுத்ரயோ: ।
ஸூராக்ர்யஸௌவீர கயோர்யதந்தரம்
ததந்தரம் வை தவ ராகவஸ்ய ச ॥ 47

வநே - 'காட்டில் வசிக்கும்
ஸிம்ஹ ஸ்ருகாலயோ:- சிங்கத்திற்கும் நரிக்கும்
யதந்தரம் - எவ்வளவு ஏற்றத்தாழ்வோ,
ஸ்யந்திநிகாஸமுத்ரயோ:- சாக்கடைக்கும் சமுத்திரத்திற்கும்
யதந்தரம் - எவ்வளவு ஏற்றத்தாழ்வோ,
ஸௌவீரகயோ: - அமிருதத்திற்கும் காடிக்கும்
யதந்தரம் - எவ்வளவு ஏற்றத்தாழ்வோ,
தத் வை - அதே
அந்தரம் - ஏற்றத்தாழ்வு
ராகவஸ்ய - ஸ்ரீராமருக்கும்
தவ ச - உனக்கும்.

यदन्तरं काञ्चनसीसलोहयोर्यदन्तरं चन्दनवारिपङ्कयोः ।
यदन्तरं हस्तिबिडालयोर्वने तदन्तरं दाशरथेस्तवैव च ॥

யதந்தரம் காஞ்சனஸீஸலோஹயோர்
யதந்தரம் சந்தநவாரிபங்கயோ: ।
யதந்தரம் ஹஸ்திபிடாலயோர்வனே
ததந்தரம் தாஶரதேஸ் தவைவ ச ॥ 48

காஞ்சன ஸீஸலோஹயோ: - 'பொன், ஈயம் என்னுமிரண்டு உலோகங்களுக்கும்
யதந்தரம் - எவ்வளவு ஏற்றத்தாழ்வோ,
சந்தன வாரி பங்கயோ: - சந்தனத்திற்கும் சேற்றிற்கும்
யதந்தரம் - எவ்வளவு ஏற்றத்தாழ்வோ,
வனே - காட்டில் வசிக்கும்
ஹஸ்தி பிடாலயோ:- யானைக்கும் பூனைக்கும்
யதந்தரம் - எவ்வளவு ஏற்றத்தாழ்வோ,
தத் ஏவ - அதே
அந்தரம் - ஏற்றத்தாழ்வு
தஶரதே: - ஸ்ரீராமருக்கும்
தவ ச - உனக்கும்.

यदन्तरं वायसवैनतेययोर्यदन्तरं मद्गुमयूरयोरपि ।
यदन्तरं सारसगृध्रयोर्वने तदन्तरं दाशरथेस्तवैव च ॥

யதந்தரம் வாயஸவைநதேயயோர் யதந்தரம் மத்குமயூரயோரபி ।
யதந்தரம் ஸாரஸக்ருத்ரயோர்வநே ததந்தரம் தாஶரதேஸ் தவைவ ச ॥ 49

வாயஸ வைநதேயயோ:- 'காக்கைக்கும் கருடனுக்கும்
யதந்தரம் - எவ்வளவு வித்தியாசமோ,
மத்குமயூரயோ: அபி- நீர்க்கோழிக்கும் மயிலுக்கும்



யதந்தரம் - எவ்வளவு வித்தியாசமோ,
வநே - காட்டிலிருக்கும்
ஸாரஸ க்ருத்ரயோ: - அன்னப்பறவைக்கும் கழுகுக்கும்
யதந்தரம் - எவ்வளவு வித்தியாசமோ,
தத் ஏவ - அதே
அந்தரம் - வித்தியாசம்
தாஶரதே: - ஸ்ரீராமருக்கும்
தவ ச - உனக்கும்.

तस्मिन् सहस्राक्षसमप्रभावे रामे स्थिते कार्मुकबाणपाणौ ।
हृतापि तेऽहं न जरां गमिष्ये वज्रं यथा मक्षिकयावगीर्णम् ॥

தஸ்மின் ஸஹஸ்ராக்ஷஸமப்ரபாவே
ராமே ஸ்திதே கார்முக பாணபாணௌ ।
ஹ்ருதா அபி தேऽஹம் ந ஜராம் கமிஷ்யே
வஜ்ரம் யதா மக்ஷிகயாவகீர்ணம் ॥ 50

தஸ்மின் - 'அந்த
ஸஹஸ்ராக்ஷ ஸமப்ரபாவே- இந்திரனை நிகர்த்த ஆற்றலுடைய
ராமே - ஸ்ரீராமர்,
கார்முக பாணபாணௌ- கோதண்டபாணியாய்
ஸ்திதே - இருக்கையில்,
அஹம் - நான்
ஹ்ருதா அபி - அபகரிக்கப்பட்டவளாக ஆயினும்
மக்ஷிகயா - ஈயினால்
அவகீர்ணம் - நக்கப்பட்ட
வஜ்ரம் யதா - நீரோட்டமுள்ள வைரம்போல
தே - உன்னால்
ஜராம் - கற்பின் குறைவை
ந கமிஷ்யே - அடைய மாட்டேன்.'

इतीव तद्वाक्यमदुष्टभावा सुधृष्टमुक्त्वा रजनीचरं तम् ।
गात्रप्रकम्पाद्व्यथिता बभूव वातोद्धता सा कदलीव तन्वी ॥

இதீவ தத்வாக்ய மதுஷ்டபாவா
ஸுத்ருஷ்டமுக்த்வா ரஜநீசரம் தம் ।
காத்ர ப்ரகம்பாத்வ்யதிதா பபூவ
வாதோத்ததா ஸா கதலீவ தன்வீ ॥ 51

அதுஷ்ட பாவா - நிஷ்களங்க நினைவுற்றவளும்
தன்வீ - மெல்லிய மேனியாளுமாகிய
ஸா - அவள்,
ரஜநீ சரம் - திருடனாகிய

தம் - அவனைப் பார்த்து
தத்வாக்யம் - அவன் சொல்லுக்கு
இதி இவ - மேற்கண்டவாறு
ஸுத்ருஷ்டம் - திடமாக
உக்த்வா - பதில் கூறிவிட்டு,
வாதோத்ததா - பெருங்காற்றால் அசைக்கப்பட்ட
கதலி இவ - வாழைபோல்
காத்ர ப்ரகம்ப வ்யதிதா- உடல் நடுங்கி உள்ளம் குழம்பியவளாய்
பபூவ - ஆயினள்.

तां वेपमानामुपलक्ष्य सीतां स रावणो मृत्युसमप्रभावः ।
कुलं बलं नाम च कर्म च स्वं समाचचक्षे भयकारणार्थम् ॥

தாம் வேபமானா முபலக்ஷ்ய ஸீதாம் ஸ ராவணோ ம்ருத்யு ஸம ப்ரபாவ: ।
குலம் பலம் நாம ச கர்ம ச ஸ்வம் ஸமாசசக்ஷே பயகாரணார்தம் ॥ 52

ஸ: - அந்த
ம்ருத்யு ஸம ப்ரபாவ:- யமனுக்கொப்பான குணமுடைய
ராவண: - ராவணன்,
தாம் ஸீதாம் - அந்த சீதாதேவியை
வேபமானாம் - நடுங்குபவளாய்
உபலக்ஷ்ய - கவனித்து,
பயகாரணார்தம் - அதிக பயமுறுத்த
ஸ்வம் குலம் - தனது குலத்தையும்;
பலம் - பலத்தையும்,
நாம ச - பெயரையும்,
கர்ம ச - செயலையும்
ஸமா சசக்ஷே - பின்வருமாறு நன்கு சொல்ல துணிந்தான்.

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே*
*ராவணாதிக்ஷேபோ நாம ஸப்தசத்வாரிம்ஶ: ஸர்க: ॥*

;



## அஷ்ட சத்வாரிம்ஶ: ஸர்க: - 48

एवं ब्रुवन्त्यां सीतायां संरब्धः परुषाक्षरम् ।
ललाटे भ्रुकुटीं कृत्वा रावणः प्रत्युवाच ह ॥

ஏவம் ப்ருவந்த்யாம் ஸீதாயாம் ஸம்ரப்த: பருஷா க்ஷரம்: ।
லலாடே ப்ருகுடீம் க்ருத்வா ராவண: ப்ரத்யுவாச ஹ ॥ 1

ஸீதாயாம் - சீதாதேவி
ஏவம் ப்ருவந்த்யாம்- இவ்விதம் பேசியபொழுது
ராவண: - ராவணன்,
லலாடே - நெற்றியில்
ப்ருகுடீம் க்ருத்வா - புருவங்களை நெறித்து
ஸம்ரப்த: - கோபத்தால் விம்மியவனாய்
பருஷாக்ஷரம் - கொடிய சொல்லை
ப்ரத்யுவாச ஹ - பின்வருமாறு பதிலாயுரைத்தான்.

भ्राता वैश्रवणस्याहं सापत्नो वरवर्णिनि ।
रावणो नाम भद्रं ते दशग्रीवः प्रतापवान् ॥

ப்ராதா வைஶ்ரவணஸ்யாஹம் ஸாபத்நோ வரவர்ணினி ।
ராவணோ நாம பத்ரம் தே தஶக்ரீவ: ப்ரதாபவான் ॥ 2

यस्य देवाः सगन्धर्वाः पिशाचपतगोरगाः ।
विद्रवन्ति भयाद्भीता मृत्योरिव सदा प्रजाः ॥

யஸ்ய தேவா: ஸகந்தர்வா: பிஶாச பதகோரகா: ।
வித்ரவந்தி பயாத் பீதா ம்ருத்யோரிவ ஸதா ப்ரஜா: ॥ 3

येन वैश्रवणो भ्राता द्वैमात्रः कारणान्तरे ।
द्वन्द्वमासादितः क्रोधाद्रणे विक्रम्य निर्जितः ॥

யேந வைஶ்ரவணோ ப்ராதா த்வைமாத்ர: காரணாந்தரே ।
த்வந்த்வ மாஸாதித: க்ரோதாத் ரணே விக்ரம்ய நிர்ஜித: ॥ 4

यद्भयार्तः परित्यज्य स्वमधिष्ठानमृद्धिमत् ।
कैलासं पर्वतश्रेष्ठमध्यास्ते नरवाहनः ॥

யத்பயார்த: பரித்யஜ்ய ஸ்வமதிஷ்டானம்ருத்திமத் ।
கைலாஸம் பர்வதஶ்ரேஷ்ட மத்யாஸ்தே நரவாஹன: ॥ 5

यस्य तत् पुष्पकं नाम विमानं कामगं शुभम् ।
वीर्यादेवार्जितं भद्रे येन यामि विहायसम् ॥

யஸ்ய தத் புஷ்பகம் நாம விமானம் காமகம் ஶுபம் ।
வீர்யாதேவார்ஜிதம் பத்ரே யேன யாமி விஹாயஸம் ॥ 6

பத்ரே - 'சொன்னதைக் கேட்கும் குணவதியே!
யஸ்ய - எவனுக்கு
ஸ கந்தர்வா: - கந்தர்வர்களுள்ளிட்ட
தேவா: - தேவர்களும்,
பிஶாச பதகோரகா:- பிசாசர்களும், பதகர்களும், உரகர்களும்,
ப்ரஜா: - பிரஜைகள்
ஸதா - எப்பொழுதும்
ம்ருத்யோ: - எமனுக்கு
இவ - எப்படியோ அப்படியே
பயாத் - பயத்தால்
பீதா: - நடுங்கியவர்களாய்
வித்ரவந்தி - ஓடுகின்றார்களோ;
யேந - எவனால்
த்வைமாத்ர: - பெரியதாயின் மகனும்
ப்ராதா - தமையனும்
வைஶ்ரவண: - பிதாவாகிய விச்ரவஸ்ஸின் புதல்வருமான
நரவாஹன: - குபேரன்
காரணாந்தரே - ஒரு காரணத்தால்
க்ரோதாத் - கோபத்தால்
ரணே - போரில்
த்வந்தம் ஆஸாதித:- த்வந்தயுத்தத்தை செய்விக்கப்பட்டவனாய்
விக்ரம்ய - பலாத்கரித்து
நிர்ஜித: - தோல்வியடைவிக்கப்பட்டு,
மத் பயாத் - என்னிடத்தில் பயத்தால்
தத் - அந்த
ருத்திமத் - செல்வஞ்செறிந்த
ஸ்வம் அதிஷ்டானம்- தனது நகரை
பரித்யஜ்ய - நாடாது விட்டு,
பர்வத ஶ்ரேஷ்டம் - மலைகளிற் சிறந்த
கைலாஸம் - கயிலை மலையில்
அத்யாஸ்தே - வசிக்கின்றானோ;
யேன - எதைக்கொண்டு
விஹாயஸம் - ஆகாயத்தில்
யாமி - செல்கின்றேனோ;
தத் - அந்த
காமகம் - நினைத்தபடி செல்லவல்ல
ஶுபம் - அழகிய
புஷ்பகம் நாம - புஷ்பகமென்ற
விமானம் - விமானமானது



யஸ்ய - எவனது
வீர்யாதேவ - பராக்கிரமத்தாலேயே
ஆர்ஜிதம் - சம்பாதிக்கப்பட்டதோ;
அஹம் - அந்த நான்
வரவர்ணினி - சுந்தரீ!
வைஶ்ரவணஸ்ய - குபேரனது
ஸாபத்ந்ய: - சிறிய தாயின் மகனான
ப்ராதா - தம்பி
ராவணோ நாம - ராவணனென்ற
ப்ரதாபவான் - த்ரிலோக பிரசித்திபெற்ற
தஶக்ரீவ: - தசக்ரீவன்
தே பத்ரம் - உனக்கு நன்மையுண்டாகுக.

**मम संजातरोषस्य मुखं दृष्ट्वैव मैथिलि ।**
**विद्रवन्ति परित्रस्ताः सुराः शक्रपुरोगमाः ॥**

**மம ஸஞ்ஜாத ரோஷஸ்ய முகம் த்ருஷ்ட்வைவ மைதிலி ।**
**வித்ரவந்தி பரித்ரஸ்தாஸ் ஸுரா: ஶக்ரபுரோகமா: ॥** 7

மைதிலி - 'மைதிலி!
ஸஞ்ஜாத ரோஷஸ்ய - கோபங்கொண்ட
மம - எனது
முகம் - முகத்தை
த்ருஷ்ட்வைவ - கண்டமாத்திரத்திலேயே,
ஶக்ர புரோகமா: - இந்திரனைத் தலைவனாகக்கொண்ட
ஸுரா: - தேவர்கள்
பரித்ரஸ்தா: - உடலுமுள்ளமும் நடுங்கியவர்களாய்
வித்ரவந்தி - ஓடுகின்றார்கள்.

**यत्र तिष्ठाम्यहं तत्र मारुतो वाति शङ्कितः ।**
**तीव्रांशुः शिशिरांशुश्च भयात् संपद्यते रविः ॥**

**யத்ர திஷ்டாம்யஹம் தத்ர மாருதோ வாதி ஶங்கித: ।**
**தீவ்ராம்ஶு: ஶிஶிராம்ஶுஶ்ச ப்யாத் ஸம்பத்யதே ரவி: ॥** 8

அஹம் - 'நான்
யத்ர - எவ்விடத்தில்
திஷ்டாமி - இருக்கிறேனோ,
தத்ர - அவ்விடத்தில்
மாருத: - வாயு
ஶங்கித: - திகில்கொண்டு
வாதி - வீசுகிறான்.
தீவ்ராம்ஶு: - உஷ்ணகிரணங்களுடைய

ரவி: - சூரியன்
பயாத் - அச்சத்தால்
ஶிஶிராம்ஶு: ச - குளிர்ந்த கிரணங்களையுடையவனாகவே
ஸம்பத்யதே - மாறிவிடுகிறான்.

निष्कम्पपत्रास्तरवो नद्यश्च स्तिमितोदकाः ।
भवन्ति यत्र यत्राहं तिष्ठामि चचरामि च ॥

நிஷ்கம்ப பத்ராஸ்தரவோ நத்யஶ்ச ஸ்திமிதோதகா: ।
பவந்தி யத்ர யத்ராஹம் திஷ்டாமி ச சராமி ச ॥ 9

அஹம் - 'நான்
யத்ர - எவ்விடத்தில்
திஷ்டாமி - நிற்கிறேனோ,
சராமி ச - உலாவுகிறேனோ
தத்ர ச - அவ்விடத்திலும்
தரவ: - மரங்கள்
நிஷ்கம்ப பத்ரா: - அசைவற்ற இலைகளுடையவைகளாயும்,
நத்ய: - நதிகள்
ஸ்திமிதோதகா: ச - தயங்கிய பிரவாஹத்தையுடையவைகளாயும்
பவந்தி - ஆகின்றன.

मम पारे समुद्रस्य लङ्का नाम पुरी शुभा ।
संपूर्णा राक्षसैर्घोरैर्यथेन्द्रस्यामरावती ॥

மம பாரே ஸமுத்ரஸ்ய லங்கா நாம புரீ ஶுபா ।
ஸம்பூர்ணா ராக்ஷஸைர் கோரைர் யதேந்த்ரஸ்யாமராவதீ ॥ 10

ஸமுத்ரஸ்ய - 'சமுத்திரத்தினுள்
பாரே - தீவில்
இந்த்ரஸ்ய - இந்திரனது
அமராவதீ யதா - அமராவதி போன்று
ஶுபா - அழகிய
மம புரீ - எனது நகர்
லங்கா நாம - லங்கையென்பது
கோரை: - கொடிய
ராக்ஷஸை: - ராக்ஷஸர்களால்
ஸம்பூர்ணா - நிறைந்துள்ளது.

प्राकारेण परिक्षिप्ता पाण्डरेण विराजता ।
हैमकक्ष्या पुरी रम्या वैडूर्यमयतोरणा ॥

ப்ராகாரேண பரிக்ஷிப்தா பாண்டரேண விராஜதா ।
ஹேமகக்ஷ்யா புரீ ரம்யா வைடூர்யமயதோரணா ॥ 11



हस्त्यश्वरथसंबाधा तूर्यनादविनादिता ।
सर्वकालफलैर्वृक्षैः संकुलोद्यानशोभिता ॥

ஹஸ்த்யஶ்வரத ஸம்பாதா தூர்யநாத விநாதிதா ।
ஸர்வகாலபலைர் வ்ருக்ஷைஸ் ஸங்குலோத்யாந ஶோபிதா ॥ 12

பாண்டரேண - 'வெண்மையான
விராஜதா - அழகுற்ற
ப்ராகாரேண - மதில் சுவரால்
பரிக்ஷிப்தா - சூழப்பெற்றது.
ரம்யா - மனதைக் கவரும்
புரீ - நகர்.
ஹேமகக்ஷ்யா - பொன்மயமான கட்டிடங்கள் உள்ளது;
வைடூர்யமய தோரணா - வைடூரியங்களாலிழைக்கப்பட்ட தோரண வாயில்களையுடையது.
ஹஸ்த்யஶ்வ ரத ஸம்பாதா - யானைகளும் குதிரைகளும் ரதங்களும் நிறைந்தது.
தூர்யநாத விநாதிதா - மங்கள வாத்யங்கள், (வீணை, குழல் பாட்டு மிருதங்கள் ஆகிய நான்கும் சேர்ந்து தூர்யமென்பது) கோஷிக்கப்பெற்றது.
ஸர்வ கால பலை: - எல்லா காலத்திலும் வேண்டிய பழங்களைத்தரும்
வ்ருக்ஷை: - மரங்களால்
ஸங்குலா - நெருக்குற்றது.
உத்யாந ஶோபிதா - விளையாடும் பூந்தோட்டங்களாலழகு வாய்ந்து விளங்குவது.

तत्र त्वं वसती सीते राजपुत्रि मया सह ।
न स्मरिष्यसि नारीणां मानुषीणां मनस्विनी ॥

தத்ர த்வம் வஸதீ ஸீதே ராஜபுத்ரி மயா ஸஹ ।
ந ஸ்மரிஷ்யஸி நாரீணாம் மானுஷீணாம் மனஸ்விநீ ॥ 13

ராஜபுத்ரி - 'ராஜகுமாரீ!
த்வம் - நீ
தத்ர - அவ்விடத்தில்
மயா ஸஹ - என்னுடன்கூட
வஸதீ - வசித்துக்கொண்டு
ஸீதே - சீதே!
மனஸ்விநீ - மனோதைரியங்கொண்டவளாய்
மானுஷீணாம் நாரீணாம் - மானிடப் பெண்களை
ந ஸ்மரிஷ்யஸி - நினையாதிருப்பாய்.

भुञ्जाना मानुषान् भोगान् दिव्यांश्च वरवर्णिनि ।
न स्मरिष्यसि रामस्य मानुषस्य गतायुषः ॥

புஞ்ஜாநா மானுஷான் போகான் திவ்யாம்ஸ்ச வரவர்ணினி ।
ந ஸ்மரிஷ்யஸி ராமஸ்ய மானுஷஸ்ய கதாயுஷ: ॥ 14

வர வர்ணினி - 'சுந்தரீ!
மானுஷான் - மானிட
போகான் - போகங்களையும்,
திவ்யான் ச - தேவபோகங்களையும்
புஞ்ஜாநா - அனுபவித்துக்கொண்டு
கதாயுஷ: - அல்பாயுசையுடைய
மானுஷஸ்ய - மானிடனாகிய
ராமஸ்ய - ராமனை
ந ஸ்மரிஷ்யஸி - நினையாதிருப்பாய்.

स्थापयित्वा प्रियं पुत्रं राज्ञा दशरथेन यः ।
मन्दवीर्यः सुतो ज्येष्ठस्ततः प्रस्थापितो वनम् ॥

ஸ்தாபயித்வா ப்ரியம் புத்ரம் ராக்ஞா தஸரதேந ய: ।
மந்தவீர்யஸ் ஸுதோ ஜ்யேஷ்டஸ் தத: ப்ரஸ்தாபிதோ வனம் ॥ 15

தஸரதேந ராக்ஞா - 'தசரத மன்னனால்
ப்ரியம் - இஷ்டமான
புத்ரம் - புதல்வனை
ஸ்தாபயித்வா - இருக்கச்செய்து,
ய: - எந்த ஒரு
ஜ்யேஷ்ட: ஸுத: - ஜ்யேஷ்ட புதல்வன்
தத: - அங்கிருந்து
வனம் - காட்டிற்கு
ப்ரஸ்தாபித: - துரத்தப்பட்டானோ அவன்
மந்தவீர்ய: - அல்ப ஆற்றலுற்றவன்.

तेन किं भ्रष्टराज्येन रामेण गतचेतसा ।
करिष्यसि विशालाक्षि तापसेन तपस्विना ॥

தேந கிம் ப்ரஷ்டராஜ்யேன ராமேண கதசேதஸா ।
கரிஷ்யஸி விஸாலாக்ஷி தாபஸேந தபஸ்விநா ॥ 16

ப்ரஷ்ட ராஜ்யேன - 'ராஜ்யத்தைப் பறிகொடுத்து
கத சேதஸா - மனம் முறிந்து
தபஸ்விநா - உலகப் பற்றற்று
தாபஸேந - ரிஷியாகிய
தேந ராமேண - அந்த ராமனோடு
விஸாலாக்ஷி - தடங்கண்ணாய்
கிம் கரிஷ்யஸி - என்ன செய்யப் போகின்றாய்?

यक्षराक्षसभर्तारं कामय स्वयमागतम् ।
न मन्मथशराविष्टं प्रत्याख्यातुं त्वमर्हसि ॥



யக்ஷ ராக்ஷஸ பர்தாரம் காமய ஸ்வயமாகதம் ।
ந மன்மதஸராவிஷ்டம் ப்ரத்யாக்யாதும் த்வமர்ஹஸி ॥ 17

காமாத் - 'ஆசையால்
ஸ்வயம் - நேரில்
இஹ - இவ்விடத்திற்கு
மன்மதஸராவிஷ்டம்- மன்மத பாணங்களால் மொத்துண்டு
ஆகதம் - வந்தவனாகிய
யக்ஷ ராக்ஷஸ பர்தாரம்- யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் அரசனாகும் என்னை
ப்ரத்யாக்யாதும் - திரஸ்கரிக்க
த்வம் ந அர்ஹஸி - நீ கூடாது.

प्रत्याख्याय हि मां भीरु परितापं गमिष्यसि ।
चरणेनाभिहत्येव पुरूरवसमुर्वशी ॥

ப்ரத்யாக்யாய ஹி மாம் பீரு பரிதாபம் கமிஷ்யஸி ।
சரணேநாபிஹத்யேவ புரூரவஸமுர்வஸீ ॥ 18

பீரு - 'அஞ்சுபவளே!
உர்வஸீ - ஊர்வசி
புரூரவஸம் - புரூரவஸ் என்பவரை
சரணேந - காலால்
அபிஹத்ய - உதைத்து,
பரிதாபம் - பச்சாத்தாபத்தை
இவ - அடைந்தது போலவே
மாம் ஹி - என்னையும்
ப்ரத்யாக்யாய - அலக்ஷியஞ்செய்து
கமிஷ்யஸி - நீ அடைவாய்.

अङ्गुल्या न समो रामो मम युद्धे स मानुषः ।
तव भाग्येन संप्राप्तं भजस्व वरवर्णिनि ॥

அங்குல்யா ந ஸமோ ராமோ மம யுத்தே ஸ மானுஷ: ।
தவ பாக்யேன ஸம்ப்ராப்தம் பஜஸ்வ வரவர்ணினி ॥ 19

வரவர்ணினி - 'சுந்தரீ!
ஸ: மானுஷ: - அந்த மானிடனாகும்
ராம: - ராமன்
யுத்தே - போரில்
மம - எனது
அங்குல்யா - கைவிரல் ஒன்றுக்கு
ந ஸம: - இணையாகான்.
தவ - உனது
பாக்யேன - புண்யவிசேஷத்தால்
ஸம்ப்ராப்தம் - வந்திருக்குமென்னை
பஜஸ்வ - ஏற்றுக்கொள்.'

**एवमुक्ता तु वैदेही क्रुद्धा संरक्तलोचना ।**
**अब्रवीत् परुषं वाक्यं रहिते राक्षसाधिपम् ॥**

**ஏவமுக்த்தா து வைதேஹீ க்ருத்தா ஸம்ரக்தலோசநா ।**
**அப்ரவீத் பருஷம் வாக்யம் ரஹிதே ராக்ஷஸாதிபம் ॥** 20

ரஹிதே - ஒருவருமில்லாத சமயத்தில்
ஏவம் - மேற்கண்டவாறு
உக்த்தா - சொல்லப்பட்ட
வைதேஹீ து - சீதாதேவியோ
க்ருத்தா - சினங்கொண்டு
ஸம்ரக்த லோசநா - சிவந்த கண்களுற்றவளாய்
ராக்ஷஸாதிபம் - ராக்ஷஸ மன்னனைப் பார்த்து
பருஷம் வாக்யம் - கண்டிப்பான பதிலை
அப்ரவீத் - பின்வருமாறு மொழிந்தாள்.

**कथं वैश्रवणं देवं सर्वभूतनमस्कृतम् ।**
**भ्रातरं व्यपदिश्य त्वमशुभं कर्तुमिच्छसि ॥**

**கதம் வைஶ்ரவணம் தேவம் ஸர்வபூதநமஸ்க்ருதம் ।**
**ப்ராதரம் வ்யபதிஶ்ய த்வமஶுபம் கர்துமிச்ஸஸி ॥** 21

ஸர்வபூத நமஸ்க்ருதம் - 'எல்லாப் பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்ட
தேவம் வைஶ்ரவணம் - தேவனாகிய குபேரனை
ப்ராதரம் - தமையனாக
வ்யபதிஶ்ய - சொல்லிக்கொண்டு,
த்வம் - நீ
அஶுபம் கர்தும் - அடாததைச் செய்ய
கதம் இச்ஸஸி - எப்படித் துணிகின்றனை?

**अवश्यं विनशिष्यन्ति सर्वे रावण राक्षसाः ।**
**येषां त्वं कर्कशो राजा दुर्बुद्धिरजितेन्द्रियः ॥**

**அவஶ்யம் விநஶிஷ்யந்தி ஸர்வே ராவண ராக்ஷஸா: ।**
**யேஷாம் த்வம் கர்கஶோ ராஜா துர்புத்திரஜிதேந்த்ரிய: ॥** 22

யேஷாம் - 'எவர்களுக்கு
த்வம் கர்கஶ: - நீ முன்பின் ஆலோசியாத முரடனும்
துர்புத்தி: - புத்தியற்றவனும்
அஜிதேந்த்ரிய: - புலன்களை யடக்காதவனுமான
ராஜா - மன்னனோ, (அந்த)
ராக்ஷஸா: - அரக்கர்கள்
ஸர்வே - எல்லோரும்
அவஶ்யம் - கட்டாயம்
ராவண - ராவணா!
விநஶிஷ்யந்தி - அழியப் போகிறார்கள்.



**अपहृत्य शचीं भार्यां शक्यमिन्द्रस्य जीवितुम् ।**
**न च रामस्य भार्यां मामपनीयास्ति जीवितम् ॥**

**அபஹ்ருத்ய ஶசீம் பார்யாம் ஶக்யமிந்த்ரஸ்ய ஜீவிதும் ।**
**ந ச ராமஸ்ய பார்யாம் மாமபநீயாஸ்தி ஜீவிதம் ॥** 23

இந்த்ரஸ்ய - 'இந்திரனது
பார்யாம் - மனைவியாகிய
ஶசீம் - சசிதேவியை
அபஹ்ருத்ய - திருடி,
ஜீவிதும் - உயிருடனிருக்க
ஶக்யம் - முடிந்தாலும் முடியும்.
ராமஸ்ய - ஸ்ரீராமனது
பார்யாம் மாம் - மனைவியாகிய என்னை
அபநீய - அபகரித்து,
ஜீவிதம் - உயிர்
ந ச அஸ்தி - இருக்கவே மாட்டாது.

**जीवेच्चिरं वज्रधरस्य हस्तात् शचीं प्रधृष्याप्रतिरूपरूपाम् ।**
**न मादृशीं राक्षस धर्षयित्वा पीतामृतस्यापि तवास्ति मोक्षः ॥**

**ஜீவேச்சிரம் வஜ்ரதரஸ்ய ஹஸ்தாத்**
**ஶசீம் ப்ரத்ருஷ்யாப்ரதிரூபரூபாம் ।**
**ந மாத்ருஶீம் ராக்ஷஸ தர்ஷயித்வா**
**பீதாம்ருதஸ்யாபி தவாஸ்தி மோக்ஷ: ॥** 24

அப்ரதிரூப ரூபாம் - 'ஒப்பற்ற அழகிய திருமேனியையுடைய
ஶசீம் - சசிதேவியை
வஜ்ரதரஸ்ய - இந்திரனது
ஹஸ்தாத் - கையிலிருந்து
ப்ரத்ருஷ்ய - அபகரித்து,
சிரம் - வெகுகாலம்
ஜீவேத் - உயிருடனிருந்தாலுமிருக்கலாம்.
ராக்ஷஸ - அரக்கா!
மாத்ருஶீம் - என்போன்றவளை
தர்ஷயித்வா - அபகரித்து,
பீதாம்ருதஸ்ய அபி - அமிருதபானம் பண்ணினவனாயினும்
தவ - உனக்கு
மோக்ஷ: - கூற்றுக்குத் தப்புதல்
ந அஸ்தி - கிடையாது.'

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஆரண்ய காண்டே*
*ராவண விகத்தனம் நாம அஷ்டசத்வாரிம்ஶ: ஸர்க: ॥*

ஏகோந பஞ்சாஶ: ஸர்க: - 49

सीताया वचनं श्रुत्वा दशग्रीवः प्रतापवान् ।
हस्ते हस्तं समाहत्य चकार सुमहद्वपुः ॥

ஸீதாயா வசனம் ஶ்ருத்வா தஶக்ரீவ: ப்ரதாபவான் ।
ஹஸ்தே ஹஸ்தம் ஸமாஹத்ய சகார ஸுமஹத்வபு: ॥ 1

ஸீதாயா: - சீதாதேவியின்
வசனம் ஶ்ருத்வா - வார்த்தையை கேட்டு,
ப்ரதாபவான் - பிரதாபவானாகிய
தஶக்ரீவ: - தசக்ரீவன்
ஹஸ்தே ஹஸ்தம் - கையோடு கையை
ஸமாஹத்ய - தட்டி,
ஸுமஹத் வபு: - ஓர் பெரிய உருவத்தை
சகார - செய்துகொண்டான்.

स मैथिलीं पुनर्वाक्यं बभाषे च ततो भृशम् ।
नोन्मत्तया श्रुतौ मन्ये मम वीर्यपराक्रमौ ॥

ஸ மைதிலீம் புனர்வாக்யம் பபாஷே ச ததோ ப்ருஶம் ।
நோந்மத்தயா ஶ்ருதௌ மன்யே மம வீர்யபராக்ரமௌ ॥ 2

ஸ: - அவன்
தத: - அதன்மேல்
மைதிலீம் - சீதாப்பிராட்டியாரைப் பார்த்து
புன: - மீளவும்
வாக்யம் - பின்வரும் சொல்லை
ப்ருஶம் - அதிபயங்கரமாய்
பபாஷே - மொழிந்தான்.
மம - 'எனது
வீர்ய பராக்ரமௌ - போரிற்புறம்போகாமையும்சத்ருக்களைஜயித்தலும்
உந்மத்தயா - அதி கர்வியான உன்னால்
ந ஶ்ருதௌ ச - செவிகொடுக்கப்படவில்லை என்று
மன்யே - நினைக்கிறேன்.

उद्वहेयं भुजाभ्यां तु मेदिनीमम्बरे स्थितः ।
आपिबेयं समुद्रं च हन्यां मृत्युं रणे स्थितः ॥

உத்வஹேயம் புஜாப்யாம் து மேதிநீமம்பரே ஸ்தித: ।
ஆபிபேயம் ஸமுத்ரம் ச ஹந்யாம் ம்ருத்யும் ரணே ஸ்தித: ॥ 3

அம்பரே - 'ஆகாயத்தில்
ஸ்தித: - இருந்துகொண்டு



மேதிநீம் - பூமியை
புஜாப்யாம் - இரு கைகளாலும்
உத்வஹேயம் - உயரத் தூக்குவேன்.
ஸமுத்ரம் ச - சமுத்திரத்தையும்
ஆபிபேயம் - வற்றக் குடிப்பேன்.
ரணே ஸ்தித: - போரில் எதிர்க்கும் நான்
ம்ருத்யும் து - யமனையும்
ஹந்யாம் - மடிப்பேன்.

अर्कं रुन्ध्यां शरैस्तीक्ष्णैर्निर्भिन्द्यां हि महीतलम् ।
कामरूपिणमुन्मत्ते पश्य मां कामदं पतिम् ॥

அர்கம் ருந்த்யாம் ஶரைஸ் தீக்ஷ்ணைர் நிர்பிந்த்யாம் ஹி மஹீதலம் ।
காமரூபிண முன்மத்தே பஶ்ய மாம் காமதம் பதிம் ॥ 4

அர்கம் - 'சூரியனை
தீக்ஷ்ணை: ஶரை: - கூரிய பாணங்களால்
ருந்த்யாம் - மறைப்பேன்,
மஹீதலம் ஹி - பூமியையே
விபிந்த்யாம் - பிளப்பேன்.
உன்மத்தே - புத்தி சிதறியவளே!
மாம் - என்னை
காமரூபிணம் - நினைத்த உருவம் எடுக்கவல்லவனும்
காமதம் - கோரியதைக் கொடுப்பவனுமான
பதிம் - நாயகனாக
பஶ்ய - எண்ணிக்கொள்.'

एवमुक्तवतस्तस्य रावणस्य शिखिप्रभे ।
क्रुद्धस्य हरिपर्यन्ते रक्ते नेत्रे बभूवतुः ॥

ஏவமுக்தவதஸ்தஸ்ய ராவணஸ்ய ஶிகிப்ரபே ।
க்ருத்தஸ்ய ஹரிபர்யந்தே ரக்தே நேத்ரே பபூவது: ॥ 5

க்ருத்தஸ்ய - சினங்கொண்டு
ஏவம் - மேற்கண்டவாறு
உக்த வத: - பேசின
தஸ்ய ராவணஸ்ய - அந்த ராவணனுடைய
ஹரிபர்யந்தே - கபிலநிற ஓரங்களையுடைய
நேத்ரே - இரு கண்களும்
ஶிகிப்ரபே - அக்னிக்கொப்பாய்
ரக்தே - சிவந்தவைகளாய்
பபூவது: - ஆயின.

सद्यः सौम्यं परित्यज्य भिक्षुरूपं स रावणः ।
स्वं रूपं कालरूपाभं भेजे वैश्रवणानुजः ॥

ஸத்ய: ஸௌம்யம் பரித்யஜ்ய பிக்ஷுரூபம் ஸ ராவண: ।
ஸ்வ ரூபம் காலரூபாபம் பேஜே வைஶ்ரவணாநுஜ: ॥ 6

ஸ: - அந்த
வைஶ்ரவணாநுஜ: - குபேரன் தம்பியாகிய
ராவண: - ராவணன்,
ஸௌம்யம் - அழகிய
பிக்ஷுரூபம் - சந்நியாசி வேஷத்தை
ஸத்ய: பரித்யஜ்ய - உடனே விட்டு,
காலரூபாபம் - எமனுருவை நிகர்த்த
ஸ்வரூபம் - தனதுருவத்தை
பேஜே - எடுக்கலுற்றான்.

संरक्तनयनः श्रीमांस्तप्तकाञ्चनकुण्डलः ।
क्रोधेन महताविष्टो नीलजीमूतसंनिभः ॥

ஸம்ரக்தநயன: ஶ்ரீமாந் தப்தகாஞ்சன குண்டல: ।
க்ரோதேந மஹதா விஷ்டோ நீல ஜீமூதஸந்நிப: ॥ 7

தப்த காஞ்சன குண்டல: - சுத்த பொன்குண்டலங்களையுடையவனும்
ஶ்ரீமாந் - செல்வம் செறிந்தவனும்
நீல ஜீமூத ஸந்நிப: - கருத்த மேகத்தை நிகர்த்தவனுமான அவன்
ஸம்ரக்த நயன: - சிவந்த கண்களுற்றவனாய்
மஹதா - அளவுகடந்த
க்ரோதேந - சினத்தால்
ஆவிஷ்ட: - மெய் மறந்தவனானான்.

दशास्यः कार्मुकी बाणी बभूव क्षणदाचरः ॥

தஶாஸ்யோ கார்முகி பாணி பபூவ க்ஷணதாசர: ॥ 8

க்ஷணாதாசர: - அரக்கன்,
தஶாஸ்ய: - பத்து முகமுடையவனாய்
கார்முகி - விற்பிடித்தவனாய்
பாணி - சரபாணியாய்.
பபூவ - ஆயினன்.

स परिव्राजकच्छद्म महाकायो विहाय तत् ।
प्रतिपेदे स्वकं रूपं रावणो राक्षसाधिपः ॥

ஸ பரிவ்ராஜகச்சத்ம மஹாகாயோ விஹாய தத் ।
ப்ரதிபேதே ஸ்வகம் ரூபம் ராவணோ ராக்ஷஸாதிப: ॥ 9



ஸ: மஹாகாய: - அந்த பெருமுடலுற்ற
ராக்ஷஸாதிப: - ராக்ஷஸ மன்னனாகிய
ராவண: - ராவணன்,
தத் - அந்த
பரிவ்ராஜகச்சத்ம - கபட சந்நியாசி வேஷத்தை
விஹாய - துறந்து,
ஸ்வகம் ரூபம் - தனது உருவத்தை
ப்ரதிபேதே - அடைந்தான்.

संरक्तनयनः क्रोधाज्जीमूतनिचयप्रभः ।
रक्ताम्बरधरस्तस्थौ स्त्रीरत्नं प्रेक्ष्य मैथिलीम् ॥

ஸம்ரக்தநயந: க்ரோதாஜ்ஜீமூத நிசயப்ரப: ।
ரக்தாம்பரதரஸ்தஸ்தௌ ஸ்த்ரீரத்நம் ப்ரேக்ஷ்ய மைதிலீம் ॥ 10

ஜீமூத நிசயப்ரப: - மேகக்குவியல் மேனியனும்,
ரக்தாம் பரதர: - சிவந்த ஆடையையணிந்தவனுமான அவன்,
க்ரோதாத் - கோபத்தால்
ஸம்ரக்த நயந: - சிவந்த கண்களுடையவனாய்
ஸ்த்ரீரத்நம் - ஸ்திரீரத்னமாகிய
மைதிலீம் - மைதிலியாரை
ப்ரேக்ஷ்ய - உற்றுப்பார்த்து,
தஸ்தௌ - சற்றுத் தயங்கினான்.

सीतामसितकेशान्तां भास्करस्य प्रभामिव ।
वसनाभरणोपेतां मैथिलीं रावणोऽब्रवीत् ॥

ஸீதாமஸித கேஶாந்தாம் பாஸ்கரஸ்ய ப்ரபாமிவ ।
வஸநாபரணோபேதாம் மைதிலீம் ராவணோऽப்ரவீத் ॥ 11

அஸித கேஶாந்தாம் - கருத்தடர்ந்த குழலுடையவளும்,
பாஸ்கரஸ்ய - சூர்யபகவானது
ப்ரபாம் இவ - ஒளியை நிகர்த்தவளும்,
வஸநாபரணோபேதாம் - சிறந்த ஆடையாபரணங்களை அணிந்தவளுமான
மைதிலீம் - மிதிலை மன்னரின் திருமகளாகிய
ஸீதாம் - சீதையைப் பார்த்து
ராவண: - ராவணன்
அப்ரவீத் - பின்வருமாறு மொழிந்தான்.

त्रिषु लोकेषु विख्यातं यदि भर्तारमिच्छसि ।
मामाश्रय वरारोहे तवाहं सदृशः पतिः ॥

த்ரிஷு லோகேஷு விக்யாதம் யதி பர்தாரமிச்ஸஸி ।
மாமாஶ்ரய வராரோஹே தவாஹம் ஸத்ருஶ: பதி: ॥ 12

வராரோஹே - 'சுந்தரீ!
த்ரிஷு - மூன்று
லோகேஷு - உலகங்களிலும்
விக்யாதம் - பிரஸித்திபெற்ற
பர்தாரம் - கணவனை
இச்சஸி யதி - விரும்புகின்றாயென்றால்
மாம் ஆஶ்ரய - என்னைத் தேர்ந்தெடு.
அஹம் - நான்
தவ - உனக்கு
ஸத்ருஶ: பதி: - ஏற்ற கணவன்.

**मां भजस्व चिराय त्वमहं श्लाघ्यस्तव प्रियः ।**
**नैव चाहं क्वचिद्भद्रे करिष्ये तव विप्रियम् ॥**

மாம் பஜஸ்வ சிராய த்வமஹம் ஶ்லாக்ய: ஸ்தவ ப்ரிய ।
நைவ சாஹம் க்வசித்பத்ரே கரிஷ்யே தவ விப்ரியம் ॥ 13

பத்ரே - 'நல்லாய்!
த்வம் - நீ
சிராய - இப்பவே
மாம் பஜஸ்வ - என்னை ஏற்றுக்கொள்.
அஹம் - நான்
தவ - உனக்கு
ஶ்லாக்ய: ப்ரிய: - அருமையான கணவன்.
அஹம் - நான்
தவ - உனக்கு
விப்ரியம் - மனம்கோண
க்வசித் ச - ஒருபொழுதும்
ந ஏவ கரிஷ்யே - நடக்கவே மாட்டேன்.

**त्यज्यतां मानुषो भावो मयि भावः प्रणीयताम् ।**
**राज्याच्च्युतमसिद्धार्थं रामं परिमितायुषम् ॥**

த்யஜ்யதாம் மானுஷோ பாவோ மயி பாவ: ப்ரணீயதாம் ।
ராஜ்யாச்ச்யுதமஸித்தார் தம் ராமம் பரிமிதாயுஷம் ॥ 14

**कैर्गुणैरनुरक्तासि मूढे पण्डितमानिनि ।**
**यः स्त्रिया वचनाद्राज्यं विहाय ससुहृज्जनम् ॥**

கைர்குணைரநுரக்தாஸி மூடே பண்டித மாநிநி ।
ய: ஸ்த்ரியா வசநாத் ராஜ்யம் விஹாய ஸஸுஹ்ருஜ்ஜநம் ॥ 15

**अस्मिन् व्यालानुचरिते वने वसति दुर्मतिः ॥**



அஸ்மின் வ்யாலாநுசரிதே வனே வஸதி துர்மதி: ॥ 16

மானுஷ: பாவ: - 'மானிட எண்ணம்
த்யஜ்யதாம் - விடப்படட்டும்,
மயி - என்னிடத்தில்
பாவ: - அன்பு
ப்ரணீயதாம் - வைக்கப்படட்டும்
ய: - எந்த
துர்மதி: - ஒரு முட்டாள்
ஸ்த்ரியா: - ஒரு பெண்பிள்ளையினது
வசநாத் - சொல்லைக்கொண்டு
ஸஸுஹ்ருஜ்ஜனம் - அன்பர்களோடு கூடிய
ராஜ்யம் - ராஜ்யத்தை
விஹாய - துறந்து,
அஸ்மின் - இந்த
வ்யாலாநுசரிதே - துஷ்டமிருகங்கள் வசிக்கும்
வனே - காட்டில்
வஸதி - காலங்கழிக்கிறானோ, அந்த
ராஜ்யாத் - ராஜ்யத்தினின்று
ச்யுதம் - நீக்கப்பட்டவனும்,
அஸித்தார்தம் - பங்கமடைந்த மனோரதங்களையுடையவனும்,
பரிமிதாயுஷம் - அற்பாயிசுடையவனுமான
ராமம் - ராமனை
பண்டித மாநிநி - எல்லாந்தெரிந்ததேன நடிக்கும்
மூடே - அசடே!
கை: - எந்த
குணை: - குணங்களைக்கொண்டு
அநுரக்தா அஸி - நீ காதலிக்கின்றனை.'

**इत्युक्त्वा मैथिलीं वाक्यं प्रियार्हां प्रियवादिनीम् ।**
**अभिगम्य सुदुष्टात्मा राक्षसः कालचोदितः ॥**

இத்யுக்த்வா மைதிலீம் வாக்யம் ப்ரியார்ஹாம் ப்ரியவாதிநீம் ।
அபிகம்ய ஸுதுஷ்டாத்மா ராக்ஷஸ: கால சோதித: ॥

**जग्राह रावणः सीतां बुधः खे रोहिणीमिव ॥**

ஜக்ராஹ ராவண: ஸீதாம் புத: கே ரோஹிணீமிவ ॥

புத: - கற்றுணர்ந்த
ஸுதுஷ்டாத்மா - பரம துஷ்டாத்மாவாகும்
ராக்ஷஸ: - அரக்கனாகிய
ராவண: - ராவணன்,

கால சோதித: - விதியால் தூண்டப்பட்டவனாகி,
ப்ரியார்ஹாம் - பக்திக்குரியவளும்
ப்ரிய வாதிநீம் - ஹித்தையே சொல்லுகிறவளுமாகிய
மைதிலீம் - சீதாதேவியைப் பார்த்து
இதி - மேற்கண்ட
வாக்யம் - சொல்லை
உக்த்வா - சொல்லிவிட்டு,
கே - ஆகாயத்தில்
ரோஹிணீம் இவ - மின்னல் கொடிபோலிருக்கும்
ஸீதாம் - சீதாதேவியை
அபிகம்ய - கிட்டி,
ஜக்ராஹ - பற்றி இழுத்தான்.

**वामेन सीतां पद्माक्षीं मूर्धजेषु करेण सः ।**
**ऊर्वोस्तु दक्षिणेनैव परिजग्राह पाणिना ॥**

வாமேன ஸீதாம் பத்மாக்ஷீம் மூர்தஜேஷு கரேண ஸ: ।
ஊர்த்வோஸ்து தக்ஷிணேநைவ பரிஜக்ராஹ பாணிநா ॥

ஸ: - அவன்
பத்மாக்ஷீம் - தாமரைக் கண்ணியான
ஸீதாம் - சீதையை
மூர்தஜேஷு - கூந்தலில்
வாமேன - இடது
கரேண - கையாலும்
ஊர்வோ: து - இருதுடைகளிலுமே
தக்ஷிணேந - வலது
பாணிநா ஏவ - கையாலும்
பரிஜக்ராஹ - பிடித்துத் தூக்கினான்.

**तं दृष्ट्वा गिरिशृङ्गाभं तीक्ष्णदंष्ट्रं महाभुजं ।**
**प्राद्रवन्मृत्युसदृशं भयार्ता वनदेवताः ॥**

தம் த்ருஷ்ட்வா கிரிஸ்ருங்காபம் தீக்ஷ்ண தம்ஷ்ட்ரம் மஹாபுஜம் ।
ப்ராத்ரவன் ம்ருத்யுஸத்ருஶம் பயார்தா வனதேவதா: ॥

வனதேவதா: - வனதேவதைகள்
கிரி ஸ்ருங்காபம் - மலைக்கொடுமுடி போன்றவனும்,
தீக்ஷ்ண தம்ஷ்ட்ரம் - கூரிய கோரப் பற்களையுடையவனும்,
மஹாபுஜம் - பெருத்த கைகளையுடையவனும்,
ம்ருத்யு ஸத்ருஶம் - யமனைப் போன்றவனுமான
தம் த்ருஷ்ட்வா - அவனைப் பார்த்து
பயார்தா: - உள்ளம் நடுங்கியவர்களாய்
ப்ராத்ரவன் - ஓடினார்கள்.



**स च मायामयो दिव्यः खरयुक्तः खरस्वनः ।**
**प्रत्यदृश्यत हेमाङ्गो रावणस्य महारथः ॥**

ஸ ச மாயாமயோ திவ்ய: கரயுக்த: கரஸ்வன: ।
ப்ரத்யத்ருஶ்யத ஹேமாங்கோ ராவணஸ்ய மஹாரத: ॥

ராவணஸ்ய - ராவணனுடைய
ஸ: - அந்த
மாயாமய: - மாயையால் சிருஷ்டிக்கப்பட்டதும்,
கரயுக்த: - கோவேழுகழுதைகள் பூட்டப்பட்டதும்,
கரஸ்வன: - கோரமான ஒலியுடையதும்,
ஹேமாங்க: ச - பொன்னாலானதுமான
திவ்ய: - சிறந்த
மஹாரத: - பெரும் ரதம்
ப்ரத்யத்ருஶ்யத - திடீரென்று காணப்பட்டது.

**ततस्तां परुषैर्वाक्यैरभितर्ज्य महास्वनः ।**
**अङ्केनोद्यम्य वैदेहीं रथमारोपयत्तदा ॥**

ததஸ்தாம் பருஷைர் வாக்யைர் அபிதர்ஜ்ய மஹாஸ்வன: ।
அங்கேநாதாய வைதேஹீம் ரதமாரோபயத் ததா ॥

ததா - அப்பொழுது
மஹாஸ்வன: - அவன் பெருங்குரலுற்று
தாம் வைதேஹீம் - அந்த சீதாதேவியை
பருஷை: - கொடிய
வாக்யை: - வார்த்தைகளால்
அபிதர்ஜ்ய - மிரட்டி,
அங்கேந - துடையில்
உத்யம்ய - தாங்கி
தத: - அதிலிருந்து
ரதம் - ரதத்தில்
ஆரோபயத் - தூக்கிவைத்தான்.

**सा गृहीता विचुक्रोश रावणेन यशस्विनी ।**
**रामेति सीता दुःखार्ता रामं दूरगतं वने ॥**

ஸா க்ருஹீதா விசுக்ரோஶ ராவணேன யஶஸ்விநீ ।
ராமேதி ஸீதா துக்கார்தா ராமம் தூரகதம் வனே ॥

யஶஸ்விநீ - பெரும் புகழ்பெற்ற
ஸா ஸீதா - அந்த சீதாதேவி
ராவணேன - ராவணனால்
க்ருஹீதா - திருடப்பட்டவளாய்

துக்கார்தா - துயரத்தில் மூழ்கியவளாய்
வனே - காட்டில்
தூரகதம் - தூரத்திலிருந்த
ராமம் - ஸ்ரீராமரை நினைத்து
ராம இதி - 'ஸ்ரீராம' என்று
விசுக்ரோஶ - கதறினாள்.

**तामकामां स कामार्तः पन्नगेन्द्रवधूमिव ।**
**विवेष्टमानामादाय उत्पपाताथ रावणः ॥**

தாமகாமாம் ஸ காமார்த: பந்நகேந்த்ரவதூமிவ ।
விவேஷ்டமாநாமாதாய உத்பபாதாத ராவண: ॥ 25

அத - அப்பொழுது
காமார்த: - காமவெறிகொண்ட
ஸ: ராவண: - அந்த ராவணன்,
பந்நகேந்த்ர வதூம் இவ - சர்ப்பராஜன் மனைவியைப் போன்றவளும்,
அகாமாம் - சிறிதுமுடன்படாதவளாய்
விவேஷ்டமாநாம் - துடித்துக்கொண்டிருக்கிறவளுமான
தாம் - அவளை
ஆதாய - சிறைப்படுத்தி,
உத்பபாதாத - உயரக் கிளம்பினான்.

**ततः सा राक्षसेन्द्रेण ह्रियमाणा विहायसा ।**
**भृशं चुक्रोश मत्तेव भ्रान्तचित्ता यथातुरा ॥**

தத: ஸா ராக்ஷஸேந்த்ரேண ஹ்ரியமாணா விஹாயஸா ।
ப்ருஶம் சுக்ரோஶ மத்தேவ ப்ராந்தசித்தா யதாதுரா ॥ 26

தத: - அப்பொழுது
ராக்ஷஸேந்த்ரேண - ராக்ஷஸ மன்னனால்
விஹாயஸா - ஆகாயமார்க்கத்தில்
ஹ்ரியமாணா - கொண்டுபோகப்படுகிற
ஸா - அவள்
ஆதுரா - ஏதொன்றையும் தான் செய்ய முடியாதவளாய்
யதா - இருந்தமையால்
ப்ராந்தசித்தா - உள்ளம் கலங்கி
மத்தா இவ - பைத்தியம் பிடித்தவள் போலாகி
ப்ருஶம் - மிகக் கஷ்டமாய்
சுக்ரோஶ - பின்வருமாறு கதறினாள்.

**हा लक्ष्मण महाबाहो गुरुचित्तप्रसादक ।**
**ह्रियमाणां न जानीषे रक्षसा माममर्षिणा ॥**



ஹா லக்ஷ்மண மஹாபாஹோ குருசித்தப்ரஸாதக ।
ஹ்ரியமாணாம் ந ஜாநீஷே ரக்ஷஸா மாமமர்ஷிணா ॥ 27

ஹா லக்ஷ்மண - 'ஹா! லக்ஷ்மணரே!
மஹாபாஹோ - சுத்த வீரரே!
குருசித்த ப்ரஸாதக - பெரியோர்கள் மனம் மகிழ நடப்பவரே!
அமர்ஷிணா - மகா முரடனாகிய
ரக்ஷஸா - அரக்கனால்
மாம் - என்னை
ஹ்ரியமாணாம் - திருடிக்கொண்டு போகப்படுகிறவளாய்
ந ஜாநீஷே - நீர், அறியவில்லை.

**जीवितं सुखमर्थांश्च धर्महेतोः परित्यजन् ।**
**ह्रियमाणामधर्मेण मां राघव न पश्यसि ॥**

ஜீவிதம் ஸுகமர்தாம்ஶ்ச தர்மஹேதோ: பரித்யஜந் ।
ஹ்ரியமாணாமதர்மேண மாம் ராகவ ந பஶ்யஸி ॥ 28

ராகவ - 'ஸ்ரீராம!
ஸுகம் ஜீவிதம் - சுகவாழ்வையும்,
அர்தான்ச - பொருள்களையும்,
தர்மஹேதோ: - தர்மத்திற்காக
பரித்யஜன் - துறக்கும், நீர்
மாம் - என்னை
அதர்மேண - அநியாயமாய்
ஹ்ரியமாணாம் - திருடிக்கொண்டு போகப்படுகிறவளாய்
ந பஶ்யஸி - காணவில்லை.

**ननु नामाविनीतानां विनेतासि परंतप ।**
**कथमेवंविधं पापं न त्वं शाधि हि रावणम् ॥**

நநு நாமாவிநீதாநாம் விநேதாஸி பரந்தப ।
கதமேவம்விதம் பாபம் ந த்வம் ஶாதி ஹி ராவணம் ॥ 29

பரந்தப - 'சத்ருசம்ஹாரகா!
அவிநீதானாம் - அபராதிகளை
விநேதா - சிக்ஷிக்கின்றவராய்
அஸி - விளங்குகின்றீர்.
ஹி - அப்படியிருந்தும்
நநு நாம - இப்பொழுதோ
ஏவம் விதம் - இப்படிப்பட்ட
பாபம் - பாபியாகிய
ராவணம் - ராவணனை
கதம் - ஏனோ

